உ

ஓம் ஸ்ரீ முருகா

ஓம் ஸ்ரீ சரவணபவாய, ஷண்முகாய, ஸுப்ரமண்யாய நம :

'அன்பு வெளியீடு'—அலர் 9.

# "குமரோதயம்"

அல்லது

# அகந்தையின் அழிவு

(நாடகம்)




'மஹாகவி' திரு. நா. பிச்சுமணி,

தமிழாசான்

தென் இந்திய கல்விக்கழக உயர்தரக் கல்லூரி,

மாதுங்கா : : பாம்பே-19.

(South Indian Education Society's High School

MATUNGA BOMBAY—19.)

1312 — ௨ 26

ஓம் ஸ்ரீ முருகா

ஓம் ஸ்ரீ சரவணபவாய, ஷண்முகாய, ஸுப்ரமண்யாய நம:

‘அன்பு வெளியீடு’— அலர் 9.

# “ருமரோதயம்”

அல்லது

# அகந்தையின் அழிவு

(நாடகம்)






‘மஹாகவி’ திரு. நா. பிச்சுமணி,
தமிழாசான்
தென் இந்திய கல்விக்கழக உயர்தரக் கல்லூரி,
மாதுங்கா : : பாம்பே-19.
(South Indian Education Society's High School
MATUNGA BOMBAY—19.)

...வை தி.க. சண்முகம் நூலகம்,
வரிசை எண்: 208
நன்கொடை எண்: 208 உ

ஓம் ஸ்ரீ முருகா

'குமரோதயம்'

# அர்ப்பணம்



பதினேழு ஆண்டுகளாக ஏழையின் பணியை அன்புடன் ஏற்று, என் ஊனையும், உளையும், உறவையும், உரத்தையும், ஊக்கத்தையும், அறிவையும் பெருக்கி, குற்றங்களையும் குணங்களாகக் கொண்டு, அன்பும் ஆசியும் தந்தருளிய எனது அன்னை, பம்பாய், மாதுங்கா, தென் இந்திய கல்விக் கழக உயர்தரக் கல்லூரியாகிய கலைக்கோவில், பூர்ண சந்திரியோடு ஒளிரவும், மாணவர் குழாம் ஸகல விதத்திலும் மேம்பாடுறவும், நாடகக்கலை நன்னிலையோடு மிளிரவும், இயற்றவல்ல பரம கருணை நிதியான பரம் பொருளுக்கு இச்சிறு நூல் அர்ப்பணம்.



மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
தி.க. சண்முகம் நூலகம்

திரு. நா. பிச்சுமணி,
ஆசிரியர்.

உ

ஓம்-ஸ்ரீ-முருகா

ப்ரவசனரத்னாகர, மஞ்சக்குடி

## ப்ரம்மஸ்ரீ கை. ராஜகோபாலசாஸ்த்ரிகளவர்கள் அளித்த

# பாராட்டுரை

ஸ்ரீ [illegible]

[illegible] (நிலவரை நீள்புகழாற்றிற் புலவரைப் போற்றாது புத்தேளுலகு) [illegible]

[illegible]

உதா³ந்நீதவி மஹாகவிவரேண ஶ்ரீ பா³த³ராயணேந க்ருதம் ஶ்ரீஸ்லாஞ்ஞதநதிக்ருஷ்ய கோ³பாலோத³யநாடகரத்நம் ஸம்ஸ்க்ரியதே ||

யதா² ஶ்ரீநமணிக்ரணோத³யேந ஸூர்யகாந்திரஸேந வஸ்துவைஶேஷ்யம் ப்ரகாஶ்யதே ததா² வித்³வஜ்ஜநாயாஸ்க்ருத கோ³பாலோத³யேந ஸஹ்ருத³யாந்திரஸேந வஸ்துவைஶேஷ்யம் ஹ்ருதயவ த்³ருஷ்டிப்ரவர்த்யதே. ஶ்ருங்கா³ராதி³வயஸ்யம் ஸ்வஹ்ருதி³ ஸம்ஸ்ம்ருதவ ஶ்லோகிதம் ஸத்யஸாரஸமாவஹிதம் நாடகரத்நம் ஸஹோ கவிதா! கஸ்ய வரதோவகாரகஸ்ய வித்³வஜ்ஜநாயாஸ்ய வயஸ்ஸ்ய ஶ்ரீகோ³பாலமூர்த்தே: ஸந்தத் ஸ்மரணேந ஶ்ரவணேந நாடேந ஸஹ்ருதீநாம் பா³லாநாம் ஶ்ருங்கா³ரோத்³ரேகாதி³ ஸம்வத³ம் ஸம்ப்ரதா³யமஹாகவிதி ஶ்ரீஜ்ஞாந ஸ்ஸ்த³ஶரணாரவிந்த³யோ: ப்ரணிவத்ய ப்ராயஶ்யோக³: உதி³தம்

கெ. ராஜகோ³பாலஶாஸ்த்ரீ

29-10-'52

நாடகப் பேராசிரியர்

## ராவ்பகதூர் பி. சம்பந்த முதலியார் அவர்கள்

அளித்த

# சிறப்புரை



இந் நாடகாசிரியர் எனக்கு நேராக அறிமுகமாக யில்லாவிட்டாலும் இந் நாடகத்தைப் பற்றிய எனது அபிப்பிராயத்தை தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டபடியால் அதற்கிசைந்து அடியிற் கண்டதை எழுதுகிறேன்.

இந் நாடகமானது தக்கயாகம், குமார சம்பவம் என்கிற இரண்டு புராணக் கதைகளை யொன்று சேர்த்து 'குமரோதயம்' என்ற பெயருடன் ஒரே நாடகமாக எழுதி யிருக்கிறார். தற்காலத்தில் புராணக்கதைகளை யொட்டிய நாடகங்கள் அநேகமாக வந்திருக்கின்றன. அப்படி யிருந்தும் இதை எழுதியது ஒரு ஆச்சரிய மன்று. தமிழர்களாகிய இந்துக்களுக்கு புராணக் கதைகளில் இருக்கும் ஆர்வமே இதற்குக் காரணமாகும்.

நாடகமானது எல்லோரும் படித்து அறியக் கூடிய நல்ல எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இது பள்ளியில் படிக்கும் சிறுவர், படிப்பதற்கும் நடிப்பதற்கும் உபயோகப்படு மென்பது எனது அபிப்பிராயம். அன்றி யும், முதிர்வயது அடைந்தவர்களும், மதப்பற்று அடைந்த வர்களா யிருந்தால் இதைப் படித்து சந்தோஷப்படுவார்க ளென்று நம்புகிறேன். இந் நாடகாசிரியர் இன்னும் இதைப்போன்ற பல நாடகங்களை எழுதி தமிழ் உலகத் திற்கு உதவுவாராக. அப்படிச் செய்வதாயின் அவரை நான் ஒன்று வேண்டுகிறேன். அதாவது இதிஹாச புராணக் கதைகளை நாடக ரூபமாக எழுதுவதாக யிருந் தாலும் அவைகளை இதுவரையில் மற்றவர்கள் கையாளாத கதைகளை எடுத்து நாடகங்களாக எழுத வேண்டுமென் பது எனது வேண்டுகோள்.

பி. சம்பந்த முதலியார்

உ

வேலுமயிலுந் துணை

சிதம்பரம் மஹாதேஜோ மண்டல சபை வித்வான்

## A. M. நடராஜ கவி அவர்கள்

இயற்றிய

# சாற்றுக் கவி



ஆசிரியம்

சீர்மேவும் உலகெலாம் கொண்டாடச் சூர்மாய்த்த
சிவசுப்ரமணிய னெங்கள்
செவ்வேளை யெவ்வேளை யும்பரவி யவனருட்
சித்தியால் குமரோதயப்
பேர்மேவும் நூலொன் றியற்றினன் இதனருமைப்
பேசவொரு நாப்போதுமோ
பிரசமுக் கனிகன்னற் சீனியுங் கைக்குமப்
பிரபலன் யாரென்னிலோ
தார்மேவு மார்பன் அந் தணர்குல மகாகவி
தமிழ்ப் போதனுசிரியன் மெய்த்
தவமிகு திருப்புடை மருதூரன் பக்திமான்
தயைவடிவ பிச்சுமணியாம்
ஏர்மேவு நாமத் தியங்குவோன் நூற்பல
வியற்றிநற் பேறு பெற்றேன்
எண்டிருவின் வாழ்விலிவன் தண்டமிழ்த் தொண்டுசெய்
தென்ஞான்றும் வாழ்க மாதோ.

17, சுப்பரமணிய முதலி தெரு,
ஜி. டி., மதராஸ்,

A. M. நடராஜ கவி.

உ

ஓம் ஸ்ரீ முருகா

குமரோதயத்திற்கு ஓர் பக்தரின்

# வாழ்த்து

———

முருகனின் முயற்சி முளைக்கவைத்த
முதல் தமிழ் ஒழுகுங் "குமரோதயம்"
குறித்த குருவின் கரங்கள்பெற்ற
குமரன் அருள், குன்றுபோல் வாழ்க!

பம்பாய் தமிழ்ச் சங்கத் தலைவரும்,

(Central Board of Film Censors, Regional Officer)

ஸ்ரீ எஸ். ஏ. ஐயர் அவர்களின்

# உரை

---

திரு. நா. பிச்சுமணி அய்யர், அவர்களின் அன்பு வெளியீட்டுப் பாட்டுக்களை நான் பார்த்துள்ளேன். அவைகள் பக்திரசத்தை ஊட்டும் செய்யுள்களாவன.

இப்பொழுது அவர்கள் இந்த "குமரோதயம்" என்னும் நாடகத்தை நூலாக வெளியிட முன்வந்துள்ளார். இந்தத் திருப்பணி வெற்றியுடன் நிறைவேறுமாய் இறைவனை வேண்டிக்கொள்கிறேன்.

20, Nagin Mahal,
Churchgate,
Bombay.

இப்படிக்கு,
(Sd ) எஸ். ஏ. ஐயர்,

25—4—52



திரு. நா. பிச்சுமணி ஆசிரியர்

ஓம் ஸ்ரீ முருகா

'அன்பு வெளியீடு' அலர்—9

'குமரோதயம்'

(நாடகம்)

# நூன்முகம்

---

'இயல், இசை, நாடகம்' என்பது முத்தமிழ். இம்மூன்றினாலேயும உலகம் இன்பத்தில் திளைத்து நல்வழிப் படுகின்றது. ஆனால், இம்மூன்றினுள்ளும் நாடகக்கலையானது கற்றோர் மற்றுமல்லாமல் யாவரையும் பிணித்து, மனத்தை யுருக்கி, மாண்பினை உறச் செய்யும் அதிசய வல்லமை படைத்தது. இதனாலன்றோ நாடகமும், அஃதினைச் சார்ந்த இயங்கு பேசுபடக் காக்ஷிகளும், யாவராலும் பெரிதும் விரும்பிப் போற்றப்படுகின்றன. நாடகங்கள், நல்ல முறையில், செவ்விய நளினமான எளிய நடையில், சாதாரணமாக வழங்கும் செந்தமிழ்ச் சொற்களை மேற் கொண்டு, சமூகத்தைத்திருத்தும் பான்மையையே குறிக்கோளாகக் கொண்டு, நல்ல கதைகளையோ, நல்வாழ்க்கை முறையையோ உள்ளடக்கி எழுதப்பட்டு அரங்கேறி நடிக்கப்பெறின், அவை பெரும்பயனை விளைக்குமென்பதற் கையமில்லை. அதனாற்றான், கல்வி நிலையங்களில் ஏனைய பாடதிட்டங்களோடு நாடகக் கலையையும் மாணவர்கள் பூர்ணமாக அப்யஸிப்பதற்குரிய முயற்சிகளைக் கையாளுகின்றனர்.

அவ்விதமே, எளியேன் பதினெட்டு வருஷங்களாகப் பணியாற்றி வரும் பம்பாய், மாதுங்கா, தென் இந்திய கல்விக் கழக உயர்தரக் கல்லூரியிலும் (South Indian Education Society's High School. Matunga, Bombay இந்நாடகக் கலை, ஆங்கிலம், வடமொழி, தென் மொழி இம்மூன்றிலும் பயிற்றுவிக்கப்பட்டு வருவது போற்றத் தக்கதாகும். தென்மொழி சம்பந்தமாகவுள்ள நாடகப் பயிற்சி ஏழையின் பொறுப்பாய் இருந்து வருதல் பற்றி, அதுவே, 'குமரோதயம்' என்னும் இந் நாடகம் எழுதுவ தற்குத் தூண்டுதலாயிற்று. இதற்கு முன் 'பக்த குமணன்', 'சேசரன்' முதலிய நாடகங்களை எழுதி, மாணவர்களைக் கொண்டு அவற்றை நடிக்கச் செய்தேனுயினும், அவற்றை அச்சிட்டு வெளியிடவில்லை. இக் 'குமரோதயம், என்னும் நாடகத்தை மட்டும் வெளியிட்டு உலகிற்குதவத் துணிந் துள்ள எளியேன் கருத்து யாதெனில், கலியுக வரதனும் கந்தப் பெருமானின் கருணம்ருதத்தைப் பள்ளியில் பயிலும் சிறுர்களும் பருகிப் பரமானந்த மடைந்து, ஆண்ட வன் அருளை அனவரதமும் பெற வேண்டு மென்பதே முதற் கருத்து. 'அவனன்றி ஓரணுவும் அசையாது', 'அகந்தை அழிவுறும்', 'பணிவு புகழ் தேக்கும்', 'உண்மை வெல்லும்', 'நேர்மையே வல்லமையன்றி திணத்திமிர் ஒரு போதும் வெல்லாது' என்னும் உயர்ந்த நீதிகளைப் பாலர் இந் நாடகத்தின் மூலமாகப் பகுத்தறிய வேண்டுமென்பது அடியேன் எண்ணம்.

ஆறுமுகன் அவதாரக் கதையாகிய 'குமரோதயம்' என்னும் நாடகத்தை எழுதும்படி எளியேனைத்தூண்டு வித்த பெருமையும், புண்ணியமும் எனது தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் P. V. பரமேஸ்வர அய்யர் M.A., அவர் களுக்கு உரியது. சிறந்த முருக பக்த ராயும், தமிழ்

அபிமானியாயும் உள்ள அவர், எளியேனல் பயிற்சி செய்விக்கப் பெற்று அரங்கேறிய 'ஸ்ரீ ஆண்டாள்', 'மார்க் கண்டேயர்' என்ற, வைஷ்ணவ பரம், சைவ பரமாகிய இரண்டு நாடகங்களும் இறைவனருளால் வெற்றிகரமாக நடந்தேறினமை கண்டு மகிழ்ந்து "கண்கண்ட தெய்வமாகிய 'சரவணபவனை' ப் பொருளாகக் கொண்டு ஆறுமுகப் பெருமாள் திரு அவதாரத்தை நாடக ரூபமாக எழுதி நம் மாணவர்களைக் கொண்டு நடிக்கச் செய்து ஷண்முகப் பிரஸாதத்தை யாவரும் பெறச் செய்ய வேண்டும்" என்று எளியேனுக்குக் கட்டளையிட, அவ்வாஞ்ஞையைத் தலைமையாசிரியரின் உத்தரவு, என மட்டும் கொள்ளாமல், குகப் பெருமான் இடும் கட்டளையெனவே உளத்திற் கொண்டு இந்நாடகம் எழுதத் துணிந்தேன்.

இத்துணிவுக்குரிய கல்வி வல்லமை, அறிவு வல்லமை உள்ளதாக என்னைக் கருதி கொள்ளுதல் மடமை. விஷயம் குகபரனுயிருப்பதாலும், 'குகப்ரஸாதம்' என்னும் அருளமுதம் யாவருடைய குறிக்கோளாக இருப்பதாலும், அதை ஒட்டிய இச்சிறு முயற்சி, பண்டிதராலும், பாலராலும் மற்று யாவராலும் அன்புடன் போற்றப்படும் என்பது எளியேன் துணிபு. தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு கல்லூரியிலும் தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானின் திரு அவதாரமாகிய இந் நாடகத்தை நடிக்க வேண்டுமென்பது எளியேனது ஆசை.

இந் நூலுக்குச் சிறப்புரை நல்கியுள்ள பெருமக்களுக்கும், இஃதினை அச்சிட்டு உலகிற்களிக்க ஏற்பட்டுள்ள பொருட் செலவனைத்தையும் மனமுவந்து அருளிய பேரின்ப அனுபூதிமான்களாகிய பக்தர்களுக்கும் எளியேனின் மனமார்ந்த நன்றி. அல்லாரை உள்ளாராக்கி,

எல்லார்க்கும் எல்லாமளிக்கும் எந்தெழில் பிரான், வேற்கையன், புகழ்மாக் கதையை, அவதாரச் சிறப்பை, வெளியிட உபகாரஞ் செய்த அன்னவர் பெருமை சொல்லுக் கடங்காதது.

'குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை' குற்றம் பொறுத்து குணம் கொண்டு ஏழையை ஆசீர்வதிக்கும்படி சான்றோர் திருவடிகளில் ஏழையேன் சிரமுற வணங்குகிறேன்.

ஆண்டவன் அகிலமெங்கும் அருள் பாலிப்பாராக.

செந்திலாண்டவன் திருவடி துணை.

தாஸன்,

திரு. நா. பிச்சுமணி,

No. 4, Uma Nevas,
Brahmanwada Road,
Matunga Bombay-19.

———

உ

ஓம் ஸ்ரீ முருகா

## காப்பு

# கீர்த்தனைகள்

**ராகம்-நாட்டை.** 1 **தாளம்-ஆதி.**

பல்லவி

கருணாநிதி—கமலவிலாஸினி
கார்த்திகேயன் அன்னாய்—தாராய் அருள் அமுதம்.

அனு பல்லவி

எள்ளினுள் எண்ணெய் போல்
உள்தோறும் நின்று
உலவச் செய்யும் தாயே
உலர்ந்தேனைக் காவாய் (கருணாநிதி)

சரணம்

சரணம் சரணம் சரணம் அம்மா
சரத் வர்ஷம் போல ஸகலதாயினி
ஸத்து சித்தானந்த ஸ்வரூபி மாங்கள்யே
ஸன் மார்க்க போதம் தாராய் கோமதி. (கருணா)

**ராகம்-ஹம்ஸாநந்தி.** 2 **தாளம்-ஆதி.**

பல்லவி

கலைவடிவே யருள்வாய்—மெய்யாய்
வலம் வந்து உன்னையே நலம் விழை எமக்கே (கலை)

அனு பல்லவி

காரிகையே உந்தன் கிருபைதனின் பலத்தால்
காரிருள் எனவே சூழ் அறிவின்மை அகலவே (கலை)

சரணம்

1. தாமப்படிகம் சூடி மழலையாழ் ஏந்தி
வெண் தாமரை மலர் உறை வாணியே அம்பா
கோமதி தாஸனின் குறை மொழிக் கிரங்காய்
நாமகளே உந்தன் அடிமையான் அல்லனோ. (கலை)

2. காண்பதெல்லாம் உந்தன் கலையழகல்லவோ
கூடும் புகழும உந்தன் அருளின்றி ஆகுமோ
பாருக்குள்ளே எனக் கார் கதிசொல்லமமா
(எனை) ஆளும் நாயகிநீயே (உன்) அன்பினில் ஆழ்த்து
வாய். (கலைவடிவே)

---

ராகம்-ப்யாக். 3 தாளம்-ஆதி.

பல்லவி

கலையருள் தேவியே கிருபை செய்குவாய்
கருணாநிலையமே கல்வியின் வடிவே—(கலையருள்)

அனு பல்லவி

சதுர்மறை பொழிந்த சதுர்முகன் பாவையே
ஸாத்ருச்யம் இல்லாத ஸத்வகுண பூஷணி(கலையருள்)

சரணம்

1. அன்பதும் நீயே—நல் அமிழ்தமும் நீயே
ஆன்றவோர் அறிவுடன் அறம் பொருள் நீயே
துன்பமெலாம் துடைக்கும் பராசக்தி நீயே
இன்பமெலாம் தரும் எந்தெழில் நீயே. (கலையருள்)

2. அன்றலர் அழகும் மென்குயில் குரலும்
அழகான ஓவிய கலைநடனகீதம்
புன்முறுவல் மென்மை இன்சொலின் கீதமும்
நல்லனயாவும் நின் அருள் உருஅன்றோ. (கலையருள்)

---

ராகம்-தோடி. 4 தாளம்-ஆதி.

பல்லவி

அகிலம் யாவையும் போற்றும் நாயகி
அன்பின் வடிவே ஸகல கலாவல்லி. (அகிலம்)

அனு பல்லவி

உண்டாக்கும் தொழில் கொண்டவன் என்செய்வான்
உயிர் நிலையாகும் அறிவு நீ தாராயேல். (அகிலம்)

சரணம்

தத்வமும் நீயே தகைகுணம் நீயே
திருமறை நூல்களின் பொருளெல்லாம் நீயே
ஒண்மையும் நீயே ஒழுக்கமும் நீயே
பாலிப்பவள் நீயே பொற்பு வல்லி நீயே
இம்மை மறுமைக்கும் இன்பமும் புகழும்
தந்தருள் தாயே நின் பதம் சரணம்மா. (அகிலம்)

---

ராகம்-வாசஸ்பதி. 5 தாளம்-ஆதி.

பல்லவி

கற்பகமே யருள்வாய்—கலிதவிர்க்கும்
காலபாசந்தவிர் கலைபக்தி தந்தருள் (கற்பகமே)

அனு பல்லவி

முற்றுணர்ந்தோம் என்று மிகுகர்வம் படைத்தோர்
அதிகார மமதையர் உறவினின் விடுபட (கற்பகமே)

சரணம்

1. இனிமை செய்ய வல்லாய் இன்னாது பொறுப்பையோ
நின் கருணைக்கும் அழகாமோ உள் நின்றுழலும்பிணி
எண்ணாத எண்ணங்கள் எண்ணி எண்ணி நொந்தேன்
அஞ்ஞான இருளை அருள் கொண்டு அகற்றுவாய்.
(கற்பகமே)

2. சத்தியம் பேசு என்பர்
பொய்ம்மையில் திளைப்பார்
ஹிம்ஸை செய்யாதே என்பர்
ஹிம்ஸையின் கர்த்தராவர்
பகைமை மற என்பர்
பகைமையே வளர்ப்பார்
(அப்)பாதகர் வலைதனில்
கலங்காதிருக்க அருள். (கற்பகமே)

---

ராகம்-பூர்விகல்யாணி 6 தாளம்-ஆதி.

பல்லவி

பரதேவதே கலைவாணியே
நிஜ தெய்வம் நீயே நீ அருள்வாயே (பரதேவதே)

அனு பல்லவி

இசை வடிவே இன்பவல்லி நீ
அன்பும் அழகும் அறிவும் அமர்ந்த (பரதேவதே)

சரணம்

சகல கலைக்கும் ஆதாரமான
சக்தியும் நீயே ஸர்வேசுவரி
பிரமன் பாவாய் அடைக்கலமே
பிறவிப் பயனை அளித்திட வாராய் (பரதேவதே)

———

ராகம்-சாரங்கா. 7 தாளம்-ஆதி.

பல்லவி

ஓம் ஸ்ரீ மாதா வாணியே—தாயே
ஓங்கார ரூபினி—ஔஷதம பாலித்தருள்—(ஓம் ஸ்ரீ)

அனு பல்லவி

ஆதாரம் நீயல்லவோ ஆவனவெல்லாம் அருள்
ஆர்த்திகளாகி நிற்கும் ஆதுரர் எங்களுக்கு—(ஓம் ஸ்ரீ)

சரணம்

நூலவர் நாவில் நின்று நாமகள் என்னும் நாமம்
நேரும் கலையளிக்கும் தேவியே உன்னதன்றோ,
நாதம் முழங்கும் செய்ய கீதமும் வேதங்களும்
நாடியே துதி செய்யும் (உன்) பாதம் பணிந்து
நின்றேன்—(ஓம் ஸ்ரீ)

———

ஓம்

# 'குமரோதயம்'

அல்லது

# அகந்தையின் அழிவு

---

காக்ஷி : 1. (a) பிரம்மா நல்லுபதேசம்.
(b) தக்கன் தவம்-பரமசிவன் வரம்.

„ 2. தக்கன் (தனிமை) இறுமாப்பு - சந்திரன் விஷயம் - (நாரதர்) பரமசிவனிடம் கோபம் - சிவனைப் பகையாகக் கருதல் - புலக முனிவர் போதம்.

„ 3. பார்வதி-பரமசிவன்-சிவனை, தேவி சோதித்தல்-யாவும் செயலற்று ஒழிதல்-தேவர் வேண்டுகோள்-பார்வதிமீது சாபம்.

„ 4. தக்கன் - வேதவல்லி - மகள் பேறுபெறல் - மகள் தவம்-பரமசிவன் காக்ஷி-அபயம்.

„ 5. தாக்ஷாயணி மணம்-சிவன் மறைவு-தக்கன் சினம்.

„ 6. கயிலையில் தக்கன் - நந்தி தேவன் உள்விட மறுத்தல் - தக்கன் சினம்.

„ 7. பிரமன் - தக்கன்-வேள்வி-சிவன் நந்தியை அனுப்பியது - (சிவ தூஷணை - தக்கன்-பிரமன் வாதம்) - நந்தி, தேவரையும் தக்கனையும் சபித்தல்.

„ 8. ததீசியும் தக்கனும் - நல்லுபதேசம் - வீணுதல் - தக்கன் யாகம் இயற்றல் - மால், தேவர்கள்.

„ 9. கயிலை - பரமசிவன், பார்வதி - நாரதர் தக்கயக்ஞம் புகலல்-பார்வதி ஆசை-கணவன் தடுத்தல்-பார்வதி யாகத்திற்கு ஏகல்.

காக்ஷி 10. பார்வதி - தக்கன் - சிவ தூஷணை, பார்வதி ஏமாற்றம்-வருத்தம்.

„ 11. பரமசிவனிடம் பார்வதி முறையீடு-வீரபத்திரன், காளி - தக்கன் யாகம் முடிவு - தக்கன் வதை.

„ 12. பார்வதி ஜனனம் - ஹிமவான் - மேனை சந்தோஷம் - தவம்.

„ 13. சூரபதுமன் தவம் - பரமசிவன் வரம் - சூரபதுமன் இறுமாப்பு - அண்டங்களை யாளல் - தேவர்கள், இந்திரனுக்குக் கட்டளை.

„ 14. அஜமுகி - (இந்திராணி) சூரபதுமன்-பானுகோபன் - ஜயந்தன் சிறையீடு - தேவர் துயரம்.

„ 15. தக்ஷிணமூர்த்தி - தேவர்கள் - பிரம்மா-மன்மதன் - எரிபடல் - இரதி புலம்பல்.

„ 16. பார்வதி தவம் - பரமசிவன் முது கிழட்டுக் கோலம் - சோதனை - வெற்றி.

„ 17. பார்வதி கல்யாணம் - சப்தரிஷிகள் மணம் பேசல் - மணம் - ஊஞ்சல்-அகத்தியனுக்குக் கட்டளை தமிழ் பரப்ப.

„ 18. கயிலை - பரமசிவன், பார்வதி - தேவர்கள் முறையீடு-சிவன் ஆறுமுகம் கொள்ளல்-ஆறு பொறி-வாயு-வருணன்-கங்கையில் விடல் - சரவணப் பொய்கை.

„ 19. கார்த்திகைப் பள்ளிகள் - பார்வதி - ஆறு குழந்தை - தாலாட்டு.

„ 20. ஆறுமுகம் - தரிசனம் - மங்களம்.

———

ஓம் ஸ்ரீ முருகா

# ஸ்ரீ குமரன் பால ஸுப்ரமண்யன் ஸ்துதி



1. கரிமுகனைக் கணத்திலுறக் கண்காட்டி
கண்ணழுகி அஞ்சி அணுக,
அரிமுகனும் சோதரும் அறுபடவே
அவனியெலாம் உய்த்த கோவே!
அறுமுகமாய் அறுமலங்கள் அறுக்குமொரு
மெய்யுருவம் மேவு மூர்த்தி!
உறுமுகத்தின் பரிவினொடு மென்றோள்கள்
பாமையொடு அணைந்த சீலா!

2. ஒருவதனத் தெழிலொளியின் ஓங்கார
தத்வமது, அகத்தினூடே
இருளகற்றி, மெய்யின்ப அமுதமதின்
கிரணங்கள் பரவியோங்க,
கரு முகிலின் தாரையென அருவாயின்
இருமொழிகள் மொழியச் செய்தே,
மருவு மணக்கடம்பமொளிர் மணவாளன்
வேலவன்றன் அடிக்கண் வைக்கும்.

3. வைக்குமொரு மொழிக்குழுமம் மலர்க்குழுவாய்க்
கொள்ளும் குணக் குன்றின் வாழ்வே!
தைக்கும் வினையகற்றிடவே பரிந்து மிக
புகழ் வேலின் துணை செய் வேளே!
கைக்கும் அறு சுவையாவும் அப்பனே! நின்
நாமமது சுவைக்கும் வாயில்,
மொய்க்கும் அளிநறவம் பொழி விரை தாமம்
ஒளி செயும் நல் மார்ப! வரதா!

4. நின்னவதார (இந்) நாடக நூலது,
நஞ்சினும் கசந்து நேர்மை யின்றாயினும்,
நின்புகழ்ச்சிறப்பையே நவிலும் பான்மையால்
நல்லோர் இகழார்; நயமுடன் கொண்டே
நல்லதோர் ஆசி நன்களிப்பரெனும்,
நாட்டம் கொண்டே நண்ணு தலுற்றனன்.
(இது) நல்லரங் கேறவும், நாளும் பொலியவும்,
நல்மாணவரின் நாவி லுறையவும்,
நேரும் வரங்கள் நீமகிழ்ந்து தவவும்,
நலமெலாஞ் சூழவும், நல்லறம் மிளிரவும்,
நாடு செழிக்கவும், நல் வாழ்வுறவும்,
நாயினும் கடையேன், நின் மலரடிக்கே
நல்லவனே! நீ நேர்ந்த வோர் காதை
நாட்டினன் மனத்தால், நாட்டினன் பணிந்தே.

ஓம் ஸ்ரீ சரவணபவாய, ஷண்முகாய, ஸுப்ரமண்யாய நம:

அவன் அருளாலே அவன் அடி அணைந்து அகலா
அன்பை அனவரதமும் அடைவோம்.

ஸ்கந்த மூர்த்திக்கு ஜே!

கார்த்திகேயனுக்கு ஜே!

கலியுகவரதனுக்கு ஜே!

அம்மை பாலனுக்கு ஜே!






உ

ஓம் : ஸ்ரீ முருகா

# குமரோதயம்

(நாடகம்)



## காட்சி. 1. (a)

இடம் :— பிரமன் தபோவனம்.

காலம் :— சாலை வேளை.

பாத்திரங்கள் :— பிரமன், தக்கன்

ன் :— குமரா, பஞ்சபஞ்ச உஷட் காலத்தில் இங்கு வந்ததற்கு யாது காரணம்? என்ன வேண்டுமோ அதைச் சொல். அதிலுள்ள ஸாதகபாதங்களைச் சொல்லி, உனக்குற்ற வழியைச் சொல்லுகிறேன்.

ன் :— தந்தையே! திரிமூர்த்திகளில் முதல்வரும் ஸர்வசக்தி வாய்ந்தவருமான பரமசிவனைக் குறித்துத் தவம் இயற்றக் கருதினேன் வேறொன்றுமில்லை அதற்குத் தங்கள் உத்தரவையும் ஆசீர்வாதத்தையும் நாடி இவண் அடைந்தேன்.

பிர :— நல்லது. உத்க்ருஷ்டமான காரியம். தவம் இயற்ற வேண்டியது தான். ஆனால் உன் ஸ்வபாவத்திற்கு அது பொருத்தமானதாக வேண்டுமே. இறுமாப்பை யொழிக்க வேண்டும். அகந்தை நாடக் கூடாது. ஐம்புலன்களையும் ஒடுக்க வேண்டும். தாழ்மை வேண்டும். பணிவுவேண்டும். ஈசனே யாவர் கருத்தையும் நடத்தும் கர்த்தா என்னும் நம்பிக்கை பூர்ணமாக வேண்டும். இவற்றை யெல்லாம் கருத்தில்நன்றாய்ப் பதித்துக் கொள். பின் தவம் செய்யப்புறப்படு

தக் :— முற்றுணர்ந்தோனே. நன்றாய் அறிந்தேன். அதன் படியே நடப்பேன். யாவும் தமதருள். பணிகின்றேன்.

பிர :— சரி, காலை அனுஷ்டானத்திற்குரிய நேரமாயிற்று வருகிறேன்.

(போகிறார்)

தக் :— (தனியே) "தந்தை சொல்வது சரிதான் எனினும் எனக்குள்ள ஆசைக்கு அது பொருத்தமாகத் தென்படவில்லை விரைவில் அழியக் கூடிய இந்த இளமை, யாக்கை, ஆயுள் இவற்றை உள்ள காலத்தில் பெரிதும் பயன் படுத்திக் கொள்ள வேண்டாமோ? அனுபவிக்க வேண்டிய செல்வம், அந்தஸ்து, அதிகாரம், ஆக்ஷி, அடக்கு முறை இவற்றையெல்லாம் அனுபவித்து, பிற்பாடு மோக்ஷமோ, முக்தியோ, பேரின்ப நிலையோ பார்த்துக் கொள்வோம். கடுமையான தவம் செய்வேன் பரமன் வருவார். அவரையே விலைக்கு வாங்கி விட்டால், பின் நான் அல்லாது உலகத்தில் வேறு யார் பெரியவர்? அவருக்கு மணம் செய்து கொடுக்க ஒரு பெண்வரம் அளிக்கும்படி கேட்பேன். பின் அவரே என்

மாப்பிள்ளையாய் விட்டால், மாமனர் தானே தெய்வம் சர்க்கரைப் பானையில் கைவிட்டவர்கள் முதுகிலேயா துடைத்துக் கொள்வார்கள்? நாக்காலல்லவோ நக்கி, நக்கி உருசி அனுபவிப் பார்கள்! பார்க்கிறேன் ஒருகை. இதுவே உகந்த இடம் தவம் செய்வதற்கு இதுவே நல்ல வேளை. இதோ அமர்கிறேன்.

(தவஞ் செய்கிருன்).

## காக்ஷி 1, (b)

தக்கன் தவம் :— பரமசிவன் வருகிருர்.

பரமசிவன் :— தக்ஷனே! பெரிதும் மகிழ்ச்சி கொண்டோம். உன் தவத்தை மெச்சினேம். யாது வரம் வேண்டும் கூறுக.

தக்கன் :— ப்ரபோ! நமஸ்கரிக்கிறேன். என் உள்ளங் கவர்ந்த தெய்வமே! தாங்கள் கருணை கூர்ந்து தரிசனம் தந்தீர்களே. இதனிறும் பேறு யாது உளது?

பர :— யாது வேண்டுமாயினும் கூசாமற் கேள் அங்ஙனமே தருவோம்.

தக் :— அங்ஙனமாயின்........ நான்........ த்ரிபுவனங் களுக்கும் அதிபனய், ஸகலமான ஸுகபோகங் களும் அனுபவித்து, ஈசுவராதிகள், முனிவர்கள், யோகிகள்; தியாகிகள், நரர், நாகர் முதலான யாவர்க்கும் மேலாகத் தலைப்பட்டு, யாவரையும் அடக்கி ஆளக்கூடிய திறமை வாய்ந்தவனுக ஆக வேண்டும், ப்ரபோ!

பர :— ஆஹா, அப்படியா அங்ஙனமே ஆகுக. இனியும் ஏதாவது வேண்டுவதுண்டோ?

தக் :— ஒன்று உளது....... அதையும் தாம்....... அனுக்ரிஹிக்க வேண்டும்.

பர :— தடையில்லாமல் சொல். அங்ஙனமே அளிப் போம்.

தக் :— தங்களுக்கு மனைவியாக அளிக்க ஒப்புயர் வற்ற ஓர் பெண்ணை அருள்வீராக.

பர :— அவ்வரமும் ஈந்தோம். தக்ஷனே, இப் பொழுது திருப்தியாயிற்றா?

தக் :— ஸ்வாமி, வெகு திருப்தி. நமஸ்காரம். ப்ரபோ!

பர :— கோரிய யாவும் பெற்றாய். ஆனால், தக்ஷனே! ஒன்று கூறுகிறோம். நன்றாய் மனதில் ஊன்றிக் கொள்.

தக் :— திருவாய் மலர்ந்தருள்க. ஈசனே!

பர :— வரம்பு மீறி, முறை மீறி, நீதி மீறி அகந்தை கொண்டு நீ ஏதாவது புரிவாயாகில் நீ பெற்ற வரங்களெல்லாம் பயனற்றுப் போகும். நீயும் ஒழிவாய் ஜாக்கிரதை. பிரம்ம புத்திரனே! நேர் வழிச்செல்வாயாக. அல்லல் ஒ ழி வா யா க. திரும்பவும்எச்சரிக்கை செய்கின்றோம். நாம் இனி அகல்வோம்.

(மறைகிறார்)

தக் :— (தனியே) "கயிலையங்கிரியான் பரமதயாளு, கேட்பதை உடன் தயங்காது அளிப்பதில் வல்லவர் தான். ஆனால், ருத்ரன், பெருங் கோபமுடையவர். எச்சரிக்கையும் செய்திருக்கின்றார். இருந்தாலும் என்ன! பெற்ற பெண் தந்தைக்கு விபரீதம் செய்வாளா? ருத்ரனையே, காலகண்டனையே, மாப்பிள்ளையாகப் பெறப்போகும் எனக்கும் அழிவுண்டோ? பார்த்துக் கொள்வோம்.

## காட்சி. 2.

இடம் :— தக்ஷன் மாளிகை.
காலம் :— நண் பகல்.
பாத்திரங்கள் :— தக்கன், மெய்க்காவலன்,
புலக மஹரிஷி.

(தக்கன், மெய்க் காவலன் வருகை)

மெய்க் காவலன் :— ப்ரபோ!

தக்கன் :— என்ன செய்தி?

மெ கா:— என்ன சொல்வேன் நான். நாவெடுக்கவும் அச்சமாயிருக்குதுங்க

தக் :— என்ன சமாச்சாரம்? எதுவாயிருந்தாலும் சொல்

மெ. கா:— எசமான் முதல் ஆயிரம் பிள்ளைங்களை தங்களைப் போல பெரியபௌர்ஷம் உண்டாகணம், என்னு பரமசிவனை நோக்கித் தவம் செய்ய அனுப்பிச்சீங்க.

தக் :— ஆம். அதற்கென்ன?

மெ. கா :— அதை ஏன் கேக்கிறீங்க. வழியிலே நாரத மஹரிஷி வந்தாருங்களாம்—தங்கள் சகோதரராம். தங்களுக்கு நன்மை செய்வதற்காகவே வந்தாருங்களாம். தங்கள் பிள்ளைகளை பௌருஷம் வேண்டாம், பெருமை வேண்டாம். செல்வம் வேண்டாம். சாமியுடைய பாதாரவிந்த சேவையிருந்தால் போதும் என்று அவங்க மனதைக் கலச்சு அப்படியே ஒடுக்கி தவம் செய்ய அனுப்பிச்சிட்டாரு. இது தங்களுக்குச் செய்த உபகாரம் என்றும் சொல்ராரு.

தக் :— ஆ! அப்படியா செய்தார். அப்படி ஏதாவது நடக்குமென்றுதான் இரண்டாவது ஆயிரம் பிள்ளைகளைப் பின்னுல் அனுப்பித்தேனே. முன்னவர்கள் கெட்டுப் போனுலும், பின்னவர்களாவது என்னைப் போல் பெருமை வாய்ந்தவர்களாகட்டுமென்று.

மெ. கா :— அவங்க கதியும் அதே மாதிரி ஆயிடுத்துங்க. நாரத ரிஷி அவங்களையும் மடக்கி முதல் ஆயிரவரைப் பண்ணினுப் போல பண்ணிப் போட்டாரு.

தக் .— ஆஹா! அப்படியா செய்தான் நாரதன். அவனுக்கு அவ்வளவும் துணிச்சலா! திரிமூர்த்திகளின் அபிமானம் மிகவும் மிகவும் இருக்கிறதென்ற பெருமையா அவனுக்கு? அந்தத் திரிமூர்த்திகளும் சேர்ந்து அவனைக் காப்பற்ற முடியுமா. பார்ப்போம்! இதோ சாபம் அவனுக்கு. அவனிடம் உடன் சென்று சொல் "என் மைந்தர்களை அலைத்து, என் மனத்தையும் அவன் அலைத்தது போல அவனும் ஓரிடத்தில் நிலைத்திராமல் ஊர் ஊராய், லோகம் லோகமாய் அலைந்து திரிந்து கொண்டே இருக்கக் கடவன்". இப்பொழுது என் பெருமையை உணர்ந்து கொள்வான் அவன்.

மெ. கா :— அப்படியே ப்ரபோ. இதோ செல்கிறேன்.

தக் :— இரு. மற்றெரு விஷயம். முக்கியமானது. என் பெண்கள் வீட்டுக்கு அடிக்கடி போய் வருகிருயா? அவர்கள் எல்லோரும் சந்தோஷமாய் வாழ்ந்து கொண்டிருக்கிருர்களா? நிச்சயமாகத் தெரியுமா? மிகவும் பிரியமாய் சந்திரனுக்கே அவர்கள் இருபத்தேழு பேர்களையும் மணம் செய்து கொடுத்தேன். ஆனுல் சந்திரன் அவர்

கள் யாவரையும் ஒன்று போலப் பாவித்து எல்லாரையும் பிரியமாய் நடத்தவில்லை யென்றும், கார்த்திகை, முதலானவர்களைக் காட்டிலும் முக்கியமாய் ரோஹிணி யிடத்திலேயே மிகவும் பிரியம் காட்டி வருகிறான் என்றும் பெண்கள் முகக் குறியினால் தெரிந்து கொண்டேன். இதன் உள் அந்தரங்கம் உனக்கு ஏதாவது தெரிந்தால் உள்ளதை ஒளியாமல் சொல். சீக்கிரம்.

மெ. கா:— ஐயனே! யாது சொல்வேனுங்க. எனக்கே சொல்றத்துக்கு நாணமாயும், அச்சமாயுமிருக்குதுங்க. அதனால் தான் சொல்லவில்லை எனக்கு ரெம்ப நாளாய்த் தெரியுமுங்க. யசமானுங்க சொல்வது முற்றிலும் வாஸ்தவந்தானுங்க.

தக்:— இந்த அற்பச் சந்திரன், தேவர்களுக்குள் சக்தி யற்ற பதர், பாண்டு பிடித்து வெளுத்திருப்பவன், இவனுக்குப் பெரியதனம் கொடுத்து, என் பெண்களையும் கொடுத்து, ஸகலவிதஸுக போகங்களும் கொடுத்தால், இவனுக்கு இவ்வளவு திமிரா! இதோ, என் சக்தியை ஒரு கணத்தில் பார்ப்பான் விரைந்து செல் "அவன் அழகெல்லாம் கெட்டு, மேனி நாளுக்கு நாள் இளைத்து, ஒடுங்கிப் போகக் கடவது" என்று நான் சபித்ததாகச் சொல் அதைக் கண்டு நடுங்கி, அவன் என்ன செய்கிறான் என்று கவனித்து வந்து என்னிடம் சொல். மறவாதே, நான் சொன்னதை. சொல் உடன்.

(மெய்க் காவலன் செல்கிறான்)

தக்:— (தனியே) "இதென்ன! யாவரும் அறிவிலிகளாய்த் தலைப் படுகிறார்கள். என் பராக்கிரமத்தையும், பெருமையையும் அறியாதவர்களாய் மயங்கி, என்னென்னமோ செய்து வருகிறார்கள்.

ஒரு கணத்தில் இவர்களை அழிக்கத் தகுந்த சக்தி என்னிடம் உள்ளது என்று இவர்கள் அறியார்கள் போலும். இந்தப் பேடி சந்திரனுக்குமா இவ்வளவு கொழுப்பு? நாயைக் குளிப்பாட்டி நடுப் பந்தியில் வைத்தது போலல்லவோ ஆயிற்று. சீச்சீ இவனை யார் மேன்மைப் படுத்துகிறார்கள்? யார் காப்பாற்று கிறார்கள் என்று பார்ப்போம்.”

(மெய்க்காவலன் வருகிறான்)

மெ. கா :— ப்ரபோ! ப்ரபோ!! அதிசயம்! அதிசயம்!

தக் :— என்ன! விரைவாகச் சொல்.

மெ. கா :— தாங்கள் இட்ட சாபத்தை சந்திர தேவரிடம் சொன்னேனுங்க. அவங்க உடனே பரமசிவனை நோக்கி தியானம் செய்தாருங்க. பரமசிவன் அசரீரியாக, “சந்திரனே! கவலைப் படாதே! நான் உன்னைக் காப்பாற்றுகிறேன். தக்ஷன் சாபம் நீ ஒளி இழந்து பதினைந்து நாள் மேனி இளைத்து வரவேண்டு மென்பதானால், இளைத்த மேனி திரும்பவும் வளர்ந்து, இழந்த ஒளி திரும்பவும் பெருகுவதாக நான் வரமளிக் கிறேன். உனக்குத் தக்ஷன் கோபம் தாங்க வலிமையில்லையானால் என் சிரம் மீது வந்து அமர்ந்து கொள். நான் உன்னைக் காப்பாற்று கிறேன்” என்று சொன்னாருங்க. அந்த மொழி களை என் காதாரக் கேட்டேனுங்க. பிற்பாடு சந்திரனிடம் பேச வேண்டியது என்ன இருக்குது? ஓடி வந்துட்டேன், பரமசிவன் என்னையும் எரித்துப் போடுவாருன்னு. இது தானுங்க நடந்த விஷயம்.

தக் :— ஹா! அப்படியா! அந்தப் பரமசிவனையும் ஓராட்டு ஆட்டுவிக்கின்றேன். எனக்கு முழு பலத்

தையும், அளவற்ற வரங்களையும் கொடுத்த அவர், என் பெண்களை அவமதித்த அந்தச் சந்திரனுக்கு அபயமளித்தாரா? இது என்ன காரியம்? நீ உடனே எல்லா முனிவர்களிடமும், எல்லா அந்தணர்களிடமும், எல்லா வேந்தர்களிடமும் சென்று, "அவரவர்கள் செய்யும் யாகங்களில் ப்ரமசிவனுக்கு ஆவிர்ப் பாகம் கொடுக்கக்கூடாது; விசேஷ மரியாதையும் செய்யக் கூடாது; என்று கட்டளை யிட்டதாகச் சொல்லி வருவாயாக. செல்.

மெ. கா:— ஆஞ்ஞை, ப்ரபோ!

(செல்கிறான)

தக்:— (தனியே) "இது என்ன? விபரீதங்கள் பெருகிக் கொண்டே போகின்றன. இருந்தாலும் என்ன? என் சக்திக்கும், தபோபலத்துக்கும் இவைகளெல்லாம் எம்மட்டு?

(புலக மஹரிஷி வருகிறார்)

புலகர்:— சிவோகம்! சிவோகம்!! ஸாம்ப, ஸத்சி தானந்த பரிபூர்ண,

தக்:— மஹரிஷே, வரவேண்டும். நமஸ்கரிக்கின்றேன்

புல:— ஸுமதீ பவ! தக்ஷனே! ஸுகமா?

தக்:— தங்கள் அருளால், ஸர்வசக்தியும், ஆனந்தமும் பெற்று விளங்குகிறேன்.

புல:— என்ன சொல்கின்றாய்! அப்பனே, நீ பிரம்ம புத்திரனாகப் பேசக்காணோமே? சக்தி என்றாய். ஆனந்தம் என்றாய் விளக்க மென்றாய். பரா சக்தி அந்த தேவி யன்றோ. ஆனந்த புருஷன் அந்த மஹேசன் ஸாம்ப மூர்த்தியன்றோ. எங்கும் விளங்கும் ஞானச் சுடரும் அவனே யன்றோ.

அப்படியிருக்க, உன்னையே சக்திமான் புத்திமான், தீமான், ஆனந்தவான், ரூபமான், ஜோதிமான் என்று மெச்சிக் கொள்கிறாயே!

தக்:— எல்லா கௌரவங்களும் நீங்கள் சொல்லப்பட்ட மகேசன் எனக்குக் கொடுத்தவைகளே. ஆதலால் சொல்லிக் கொண்டேன்.

புல:— தக்ஷனே, என்ன, அழியக்கூடிய அகங்கார மமதையில் அமிழ்ந்து அடாதவற்றை அறைகின்றனை! தர்மதாதா உன்பால் இரங்கி, உன் தவத்தை மெச்சி, வரங் கொடுத்தாரென்றால், நீ அந்தப் பரம கருணாநிதி பரமேசனைக் காட்டிலும் பெரியவனாகி விட்டாயா? கொழுந்திலை, அடி மரத்தை, வேரைப் பரிஹஸித்தாற் போன்று இருக்கின்றது நின் சொல். மேலும் 'நீங்கள் சொல்லப்பட்ட மஹேசன்' என்று நா கூசாமல், அச்சமில்லாமல் கூறத் துணிந்தாய். இது அடுக்குமா? உனக்கு மஹேசன் இல்லையா? எனக்குத் தானா இந்த அண்ட சராசரங்களுக் கெல்லாம் அவனல்லவோ ஈசன். உனக்கும் எனக்கும் மட்டுமா? படித்த மூர்க்கனாயிருக்கிறாய். உன் பிடிவாதத்துக்கும், அகந்தைக்கும் மருந்தேது? உள்ளதைச் சொன்னேன் கேள். தபம் செய்வது பெரிதல்ல அந்த பலத்தை சரியான முறையில் உபயோகிப்பதே பெரிது தக்ஷா. அகந்தையை ஒழி. அகங்காரத்தைச் சுடு, ஆத்மஞானம் பெறு ஆபத்தினின்றும் விலகுவாய். இல்லாவிட்டால் தன்வினை தன்னைச் சுடும். இனி உன்னிடம் பேசுவதில் பயனில்லை. நான் சொன்ன கடைசி மொழிகளைக் கருத்தில் இருத்து நான் செல்கிறேன், சிவ சிவ. சிவ. சிவ....

(செல்கிறார்)

தக்:— ஹ, ஹ, ஹ, ஹ, (சிரிக்கிறன்) ஓஹோ! இவர் நாரதர் கூட்டத்துப் பேர் வழி போலிருக்கிறது. அல்லது என்னைச் சோதனை செய்ய, பரமசிவன் இவரை அனுப்பியிருந்தாலும் கூடும். என்ன இருந்தாலும் இந்த தக்ஷன், இந்தத் தகர ஓசைக்குப் பயப்படப்பட்டவன்! ஒருக்காலத்திலும் நடக்காது. வரட்டும் பார்ப்போம்....

(செல்கிறன்)

## காக்ஷி 3.

இடம்:— கைலாஸம்.

காலம்:— காலை.

பாத்திரங்கள்:— சக்தி, சிவன், இந்திரன், தேவர்கள்.

சக்தி.— தேவதேவனே! அகிலாண்டங்களிலும் அகில சராசரங்களும் 'சக்தி, சக்தி' என்று உச்சரிப்பது என் நாமத்தைத் தானே. சக்தியில்லாவிடில் ஒன்றும் நடவாது உயிருள்ளன, உயிரில்லன எல்லாவற்றிற்கும் சக்தியே பிரதானம், சக்தியே மூடு, சக்தியே ஊன்று கோல் என்று சொல்கிறர்களே. அது என் பெருமையைக் குறித்துத் தானே. அதற்கும் மேலே, சக்தியில்லாவிட்டால் சிவனே என்று இருக்க வேண்டியது தான் என்றும் சொல்கிறர்கள். இது என்ன விந்தை! எனக்கும் ஒன்றும் புலப்படவில்லையே. விளங்கக் கூற வேண்டும். ப்ரபோ!

சிவன்:— (தனியே) யாரைத்தான் விட்டது அகந்தை? இவளுடைய அகந்தையையும் ஒழிக்க நல்ல சூடு ஒன்று கொடுக்க வேண்டும்.

(சக்தியைப் பார்த்து) என் அன்பே! நீ சொல்வது வாஸ்தவமே. சக்தியில்லாவிட்டால் சிவமேது? ஸகல உயிர்களிலும் சிவன் ஸர்வாந்தர்யாமியாய் நின்று ஆட்டு விக்கின்றான். "ஆட்டு வித்தால் ஆடாதார் யார்?" ஸகல உயிர்களிலும் நீயும் ஒரு உயிர் தானே உன் ஹ்ருதயத்திலும் நானே நின்று ஆட்டுவிக்கின்றேன். நீ பொற்பாவை. நான்சூத்திரதார், ஆட்டுவிப்பவன், ஆகையால் நான் இல்லாவிட்டால் நீ இல்லை. நீ இல்லா விட்டால் எனக்கு வேலையுமில்லை.

சக்தி:— நாதா, நன்கு உரைத்தீர்கள். தங்கள் வேலையை நிறுத்தி விட்டால்.

சிவன்:— ஸகல ஜீவன்களும் அசைவற்று நின்று விடும்.

சக்தி:— உண்மையாகவா?

சிவன்:— உண்மையாகத் தான் அதற்கென்ன சந்தேகம்? பரீக்ஷிக்க வேண்டுமா: இதோ பார். ஸகல ஜீவர்களின் ஹ்ருதயத்தினின்றும் நான் சற்று நேரம் விலகிக் கொள்கிறேன்.

சக்தி பதறித் துடித்துக் கீழே மூர்ச்சையற்று விழுகிறாள்.)

சக்தி:— ஐயோ! நாதா, நாதா, என் ஆவி துடிக்கின்றதே. சடலம் பதறுகிறதே ஐயோ! விஷப் பரீக்ஷை செய்தேனே! பாவியேன் யான். வேண்டாம். வேண்டாம்.

சிவன்:— பெண்ணே! எழுந்திரு (சிவன் ஆசீர் வதிக்க எழுப்புகிறார்) பாவையே! கலங்காதே. பேதாய்! நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டாயா.

(தேவர்கள் அசைவற்றுப் போய் விடுகிறார்கள். ஈசன் அனுக்ரஹத்தால் திருமபவும் மூர்ச்சை தெளிந்து, 'என்ன அபராதஞ் செய்தோமோ' என்று பயந்து, பதறி யோடி கைலையங்கிரிக்கு வருகிறார்கள்.

இந்திரன், தேவர்கள்:— பரமகருணாகரா! சம்போ! தேவதேவா! ஸோமேசா! நாங்கள் என்ன பிழை செய்தோம்; இப்படிப்பட்ட அவதிக்குட்பட செய லற்று ஒழிந்தோம். பின்பு ஒரு கணத்தில் பிழைத்தோம். பரமதயாநிதி பரீக்ஷிக்கலாகாது. எங்கள் மீது கருணை கூர்ந்து பரீக்ஷைக்குரிய காரணத்தை திருவாய் மலர்ந்தருளவேண்டும். அடியேங்கள் மீது பிழையுண்டானால் க்ஷமித்துக் கொள்ளவேண்டும். தயாஸிந்தோ!

சிவன்:— (சிரித்து) அமராதிபனே! தேவர்களே! உங்கள் பேரில் பிழை ஒன்று மில்லை. எல்லாப் பிழையும் இதோ அருகில் நிற்கும் உங்கள் தாயார், தேவி. சக்தி, பராசக்தியைச் சேர்ந்ததே. அவள் சக்தியே பெரியது என்று கருதி என்னைச் சற்று விலகியிருக்கக் குறிப்பிட்டாள். சிவனோடு சேர்ந் தால் தான் சக்திக்கு மஹிமையே யொழிய, வெறும் சக்திமட்டும் பயனில்லை என்பதைச் சற்றுப் புலப்படுத்தினேன். வேறொன்றுமில்லை. அஞ்சாதீர்.

(தேவியைப் பார்த்து) அப்படித்தானே, பாவாய். இவர்கள் அனைவரும் பதை பதைத்து இவிடம் ஓடி வருவதற்குக் காரணம் உன்னுடைய அகந்தை பற்றிய சந்தேகந் தானே!

சக்தி:— (அழுது கொண்டு) நாதா, நாதா... அடியாள் செய்த பிழையை மன்னிக்கவேண்டும். பெண் புத்தி பின் புத்தி.

சிவன் :— மன்னிப்பதாவது நீ சக்தி. சக்தி குற்றம் புரியலாமா? அக்குற்றத்தை நான் மன்னிக்க லாமா? நான் உன்னைச் சும்மா விட்டு விட்டால், பிற்பாடு இந்த தேவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? நீ செய்த குற்றத்திற்கு நீ தக்ஷன் மகளாய்ப் பிறந்து, துன்பமுற்று, பச்சாத்தாப முற்று, பிற்பாடு என்னை வந்தடைவாய். அதற்குப் பின் வேறு பரிஹாரம் சொல்கிறேன். போ.

(செல்கிறார்).

சக்தி :— ஸ்வாமி !....ஸ்வாமி !!....

இ தே :— ப்ரபோ !... ப்ரபோ !!

## காக்ஷி 4.

இடம் :— தக்கன் மாளிகை

காலம் :—பகல்

பாத்திரங்கள் :— தக்ஷன், மனைவி வேதவல்லி, தாக்ஷாயணி

வேதவல்லி :— நாதா, ஸாக்ஷாத் பரமேசனுக்கு மணம் செய்து கொடுத்து அவரை மருமகனாய்ப் பெற ஒரு பெண் வேண்டுமெனத் தாங்கள் கோரியபடி, தாங்கள் தவத்திற்கு மெச்சி பரமன் அங்ஙனமே ஆகப் பணித்ததும் அதன்படியே அற்புதமான ஸ்வர்ண விக்ரஹம் போன்ற ஓர் பெண் நம் முடைய பூங்காவிலே ஒரு பரந்த மலர்ச்செடியின் கீழ் 'குவா, குவா' என்று கத்திக் கொண்டிருந்த தும் அதை அணைத்து எடுத்தவுடன் அது தெய் வீகத் தன்மை பொருந்தி தக்க பருவத்தினளாகி, தவம் செய்ய ஆசை கொண்டதும், 'ஜகதீசனுகிய

அக்கைலேயங்கிரியானுக்கே மாலேயிடுவேன். வேறு ஒருவரையும் மனத்தால் நாடேன்' என்று பிடிவாதம் செய்ததும், அந்தப் பெண்ணைத் தாங்கள் எவ்வளவோ வசப்படுத்த முயன்றும், அவள் ஒன்றுக்கும் கட்டுப்படாது, பரமனையே மனத் திருத்தி, மாதவம் செய்ய முற்பட்டதும், பிறகு முடிவாக வேறு வழியில்லாமல் அவள் வழியே போக விட்டதும், நம்முடைய உதவி ஒன்றையும் நாடாது அவள் தன்னந் தனியே தபோவனம் அடைந்து கடுந்தவம் செய்யச் சென்றதும், இனையன யாவும் ஒரு நொடிப் பொழுது கனவாக வன்றோ தோன்றுகிறது. குருடனுக்குக் கண் தெரிந்து, திரும்பவும் பொட்டென்று அவிந்துவிட்டாற் போலிருக்கின்றதே 'நம் அற்புதக் குழந்தை சென்று வெகுகாலமாயிற்றே. இன்னும் தவமியற்றி வரம் பெற்று வந்த பாடில்லேயே!

தக்ஷன் :— நங்காய், வேதவல்லீ, பொறு. எல்லாம் அந்தப் பரமசிவன் சோதனையாக இருக்கலாம். இருக்கலாமென்ன, அவன் சோதனை தான். அவன் தான் தன் அகடவிகட ஸாமர்த்தியங்களை யெல்லாம் காட்டி வருகிறுன். நம் பெண்ணையும் அவனே வசப்படுத்தியிருப்பான். ஸந்தேகமில்லே. அப்படியிருந்சால் அதிலும் தவறு இல்லே. அவனே அவள் அடைய வேண்டுமென்பதுதான் எனது கோரிக்கையும் ஆனல், அவனேப் போல் அவளும் என்னே அவலம்பித்து அலக்ஷியம் செய்து வந்தால் பின் இருவர் பாடும் அதோகதி தான. இந்த தக்ஷன் வல்லமையை அவர்கள் அறியார்கள்.

வே: — பிராண நாதா! வீண் கோபம் வேண்டாம்! கன்று போடுமுன் 'கயிறு எடு, தும்பு எடு, தடி எடு, கட்டு, தட்டு' என்று ஆர்ப்பாட்டம் எதற்கு!

யாரது! (மகள் தாக்ஷாயணி வரும் சப்தம்)

**தாக்ஷாயணி :—** அன்னையே, தந்தையே, நமஸ்கரிக்கின்றேன். தங்கள் தவமும் என் தவமும் பலித்தது. பலித்தது.

**வே :—** கண்ணே! வா. உன்னைத் திரும்பவும் கண்ணாரக் கண்டு களிக்கப் பெற்றேனே. இதுவே என் பாக்கியம்

**தா :—** அம்மா, இந்த பாக்கியத்தைக் காட்டிலும், மற்றெல்லா பாக்கியங்களைக் காட்டிலும் மேலான பாக்கியமல்லவோ எனக்குக் கிடைத்திருக்கின்றது

**வே :—** அது என்ன! கண்மணி, வேகமாகச் சொல்.

**த :—** பெண்ணே! நடந்ததென்ன?

**தா :—** ஐம்புலனொடுக்கி, ததேவத்யானமாக, அந்த ஸதாசிவனையே நினைந்து கடுந்தவமியற்றினேன். கங்காதரன் ரிஷபாரூடராய் என் முன் காக்ஷி தந்தருளினார். அவருடைய தேஜோர் மயம் என் மனத்தில் ஊடுருவிச் சென்று ஆத்மஞானத்தை அளித்தது. எங்கும் ஜோதிமயம். எங்கும் ஆனந்தம். எங்கும் நிர்விகல்பம். எங்கும் மங்களம். அந்த மங்களமூர்த்தி புன்னகை பூத்து யாது வரம் வேண்டுமென்றார் 'என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஸர்வேசா! என்னை ஆட்கொண்ட பிறகு என்னை ஒன்று கேட்க வேண்டுமோ! நானே தங்களுக்கு அடிமை. என்னை ஆள்வது தங்கள் பாரம். தங்களுக்கு உகந்தவளாக இருப்பது என் யோகம்' என்றேன். 'பெண்ணே! நன்றாகச் சொன்னாய் வெகு நன்று. நம் எண்ணமும் அதே. நாளை உனை மணப்போம் இனி உன் பெற்றோர்களிடம் செல்லலாம்.' என்று அவரும் அருளி மறைந்தார்.

வே :— கண்ணே. இது அத்தனையும் கனவோ, நனவோ! எனக்கு அதிசயமாக இருக்கின்றதே. பரமகருணாநிதி இவ்வளவு கிருபை செய்தாரா? நானே பாக்கியவதி. நானே பாக்கியவதி.

த :— பெண்ணே, நீ கூறுவது முற்றும் உண்மை தானா? நாளை அந்தப் பரமசிவன் உன்னை மணக்க வருவாரா? வராவிட்டால் ...

தா :— கடவுள் வாக்கு பொய்க்குமா? தந்தையே. வருவார். வருவார்.

த :— உன் பரமசிவன் வாரா தொழிந்தாலும், வந்து மணவினையில்என்பெருமைக்குத் தக்கபடி நடந்து கெள்ளாவிட்டாலும், என் மனம் மாறு படும்படி ஏதாவது நடந்தாலும் பின் நீங்கள் இருவரும் படும் பாட்டை யோசித்துக் கொள்.

தா :— தந்தையே! வீண் வாதம் எதற்கு? கல்தூணில் மோதிக் கொண்டால் நம் மண்டையல்லவோ உடையும், தூணுக்குச் சேதமுண்டோ?

வே :— கண்ணே, தந்தை கோபித்துக் கொண்டாலும் பொறுப்பதல்லவோ பெண்களுக்கு அழகு.

த :— வேதவல்லீ! மணத்திற்குச் சித்தம் செய்வோம். தந்தை அயன் முதலான ஸகல முனிவர் தேவர்களையும் அழைப்பிப்போம்.

## காக்ஷி 5.

இடம்:— தக்ஷன் மாளிகை.

காலம்:— பகல்.

பாத்திரங்கள் :— தாக்ஷாயணி, சிவன், தக்ஷன் முனிவர் தேவர் முதலானோர்.

தாக்ஷாயணி - சிவன் - மணக்கோலம். தக்ஷன் கன்யாதானம் செய்தல். சிவன் தாக்ஷாயணியின் கையைப் பிடித்தல். மங்கல வாழ்த்து-முனிவர் தேவர் முதலானோர். சிவன் திடீரென்று மறைதல்.

தக்ஷன் :— ஆ! அப்படியா செய்தான் அவன், கடவுளாம் இவன். அண்டங்களெல்லாம் இவனை அரன் எனப் பூசிக்கின்றன. கொள்ளை கொள்ள வந்த சோரனைப் போலல்லவோ இவன் என் மகளைக் கைப் பிடித்தான், மறைந்து விட்டான். ஒரு வேளை என் வல்லமைக்கு அஞ்சித்தானோ? இருக்கலாம் அப்படியும். அதற்கு ஓடிவானேன் ? எதிர் நின்று வாதஞ் செய்யட்டுமே. எல்லா வற்றிற்கும் கயிலைக்கு நாளையே சென்று அவனையே கேட்டு விஷயம் தெரிந்து வருகிறேன். அவன் மரியாதையாய் நடந்து கொண்டால் விடுவேன். இல்லாவிட்டால் அந்தக் கபடனையும், அதற்குட்பட்ட இந்தக் கள்ளச் சிறுக்கியையும் என்னபாடு படுத்துகிறேன். பார்க்கலாம்.

தாக்ஷாயணி :— தந்தையே! கோபம் வேண்டாம். என்னைப் பற்றிய கவலையும் தங்களுக்கு வேண்டாம். என்னைக் கைப்பற்றியவரைக் குறித்துத் தவமி யற்றி மீண்டும் அவருடன் சேர்ந்து கொள்கிறேன் தங்கள் கோபத்துக்கு அவர் பாத்திரரானாலும் என்னை ஆளப்பட்டவர் அவர் தானே! அவருடன்

இருக்க வேண்டியதல்லவோ என் கடமை? அது தானே தங்கள் கோரிக்கையும். அதன் படி நான் நடந்து கொள்கிறேன். நான் பெண் பேதை. அதிலும் தங்கள் குழந்தை இருந்தாலும் சொல்லு கிறேன் ஒரு வார்த்தை. நெருப்புடன் விளையா டாதீர் அவர் நெருப்புக் கடவுளே. அவருடன் சீற்றங் கொண்டால் அவர் ரௌத்ரம் எங்கே? நாம் எங்கே? வீணுக விநாசத்தைத் தேடிக் கொள்ளாதீர். வேண்டாம் தங்கள் சாதனே. வேண்டாம் தங்கள் கோபம்.

த:— சீ! மூடு வாயை!! எனக்குப் புத்தி சொல்ல வந்து விட்டாயோ! மூளைத்து இரண்டு இலை தோன்ருத சிறு மூடே. உன்னைச் சாபத்தால் தூளாக்கி விடுவேன். ஆனுல் விடுத்தேன் இப்பொழுது உன் இஷ்டப்படி நட. என் முன் நில்லாதே இனி.

தா:— தந்தையே, 'ஆறுவது சினம்'. தந்தை வீடு வருவதற்கும் என்றும் பெண்களுக்குப் பாத்யதை உண்டு. அதை எந்தச் சட்டமும், தங்கள் கோபமும் கூட. தடுக்க முடியாது. ஆனுல் இதோ இப்பொழுது செல்கிறேன். பின்னும் வருவேன். 'கோபம் பாபம்' என்பது தாங்கள் அறியாததா? நான் மீண்டும் வரும் பொழுது கோப மூர்த்தியாய் விளங்கும் தாங்கள், இனி சாந்தமூர்த்தியாய் மாறும்படித்தான் என் பரமனை வேண்டுவேன்.

த:— ஆஹா!........ ஆஹா!........ உன் பரமன்........ உன் பரமன்........

## காக்ஷி 6.

இடம் :— கயிலை, அரன் மாளிகை வாயில்.

காலம் :— அருணோதயம்.

பாத்திரங்கள்:— தக்ஷன், நந்தி.

நந்தி தேவர். சிவ சந்நிதானம் காவல்.

நந்தி:— ஆஹா ஆண்டவன் கருணையே கருணை. ஈசனே! சிவகாமி நேசனே!! எவ்வுயிரையும், அகந்தையை ஒழித்து, ஆன்ம ஒழுக்கத்தை அறியச் செய்து, பலத்தை வெருட்டி, ஸாத்வீகத்தை அறியும்படி அவ்வப்போது குறிப்பாக வழிகாட்டி வருகின்றீர். அங்ஙனமிருந்தும் பேதை மக்கள் இதனுண்மையை அறியாது, மதிமயங்கி, தான்றோன்றித் தம்பிரான்களாய் அலைகின்றனர். இதன் மாயையை என்னென்று சொல்வது? ப்ரபோ! ஸகல பரிபூரணாநந்தனே?

ஆ! இதென்ன சந்தடி! யார் வருகிறது? கயிலையில் தில்லை நாதனை ஸேவிக்க வருபவர்கள் பக்தி வினயத்தோடு பண்புடன் அடக்க வொடுக்கத்தொடு வருவதாயிருக்க, இது ஏதோ புது ஆர்ப்பாட்டமாக இருக்கிறதே! ... (பார்க்கிறார்).... அப்படியா! தக்ஷனா!.... ஆ....ஆ ஆம்....தக்ஷனே தான்! இப்படி ஆர்ப்பாடம் செய்து கொண்டு வர வேறு யாருக்கு தைரியமுண்டு?

(தக்ஷன் வருகிறான்)

வாரும் தக்ஷரே! என்ன விசேஷம்? அதிகாலையில்?

தக்ஷன் :— சிவன் இருக்கிறாரா உள்ளே?

ந:— உள்ளும் இருக்கிறார் வெளியும் இருக்கிறார். இங்கும் இருக்கிறார் அங்கும் இருக்கிறார் எங்கும் இருக்கிறார்.

தா:— என்ன ஐயா! கேட்டதற்கும் பதில் சொல்லாமல் என்னென்னவோ அடுக்கிக் கொண்டு போகிறீரே?

ந:— என்ன? தாம் கேட்டதற்குப் பதில் நான் சொன்னவற்றில் இல்லையா?

தா:— இவ்வளவு கதையும் யார் கேட்டது?

ந:— கதையல்ல. மெத்தவும் உண்மை ஈசன் ஸர்வேசன் இருக்குமிடமெல்லாஞ் சொன்னேன். அவரைப் பார்ப்பதற்குத் தாங்கள் இருக்குமிடத்தில் இருந்துகொண்டே மாதேவனை மனமார மன்னியிருந்தால் அவர், நீர் இருக்குமிடம் தேடி வந்திருப்பாரே! அடியார்க்கடியரல்லவோ அவர்! அதற்காகச் சொன்னேன். வேறொன்றுமில்லை.

தா:— ஓய், நந்தி! அதை யெல்லாம் நான் கேட்கவில்லை இப்பொழுது. உமது பரமசிவன் இக்கிரியினுள் இப்பொழுது இருக்கிறாரா என்று தான் கேள்வி.

ந— அப்படியா! ஆனால் சொல்லுகிறேன் கேளும். எனது, உமது, எல்லாருடைய பரமசிவன் இப்பொழுது இங்கே உள்ளே தான் இருக்கிறார். ஆனால் அவரைப் பார்க்கத்தான் இப்பொழுது முடியாது.

தா:— நந்தி, இதற்குத் தானா இவ்வளவு வாதாட்டம்? இதை முன்னமேயே சொல்லித் தொலைக்கக் கூடாதா?

ந:— அடாடா!.... தொலைப்பவர்க்கு இங்கே இடமில்லை, நினைப்பவர்க்கே இங்கே இடம். என்னையா பேசுகின்றீர்?

தா:— ஏது? வெறும் மிரட்டலாயிருக்கிறதே?

ந:— எல்லாம் தங்கள் பாவனையின் எதிரொலிதான் பரிணமிக்கிறது.

த:— ஓய்! என்னய்யா பிதற்றுகின்றீர்? ஆம், ஆம். சிவனே பித்தன் தானே! அவனைச் சார்ந்தவரும் அப்படித் தானே இருப்பர்.

ந:— அது இருக்கட்டும். நீர் இப்பொழுது சிவனைத் தரிசிக்க வந்தீரா? அல்லது அவரைத் தூஷிக்க வந்தீரா?

த:— ஆஹா! யாரிடத்தில் வார்த்தை யாடுகிறாய். நந்தி, உன்னையும் உன் சிவனையும் ஒரு ஆட்டு ஆட்டுவிக்கின்றேன். நான் தக்ஷன் என்பதை மறந்தா பேசுகிறாய்?

ந:— மறக்கவேயில்லை. அகங்காரப் பேய் பிடித்து தலை சுற்றித் திரியும் மூர்க்கா. போ! இவிடம் நீ நின்றாலும் இந்தத் தூய்மையான இடம் அசுத்தி யாகும்.

த:— அப்படியா சொன்னாய். அக்கபாலமேந்தி யையும் அவருக்கு அடிமை செய்யும் உன்னையும் இனி யார் மதிக்கிறார்கள். பார். இதோ செல் கிறேன்.

(செல்கிறான்

ந:— மூர்க்கன், துராத்மா, மமதையென்னும் பைசாச வசப்பட்டு ஆடும் கபோதி. தனக்கு அழிவைத் தானே தேடிக் கொள்கிறான்.

(போகிறார்)

## காக்ஷி 7.

இடம் :— பிரம்மா யாகசாலை.

காலம் :— நண்பகல்

பாத்திரங்கள் :— பிரம்மா, நந்தி, தேவர்கள், தக்கன் (பிரம்மா சிவனுக்கு, நந்திமூலம், அவிர்ப் பாகம் கொடுப்பதை, தக்ஷன் தடுத்தல்.)

தக்ஷன் :— தந்தையே! ஈதென்ன அறிவீனம்? உமக்கு மானம் அவமானம் ஒன்றுமில்லையா? அந்தச் சிவனைப் பெரியோன் என்று மதித்து அவனை உமது யாகத்திற்கு நேரிற் போய் அழைத்தீரே! உம்மை மதித்து அவன் வந்தானா? இந்தக் கயிலை வாயிற் காப்பாளனாகிய கன்றுக்குட்டியை அல்லவோ அவனுக்குப் பதிலாக அனுப்பித்தான். அவனுக்கா நாம் அவிர்ப் பாகம் கொடுப்பது? அவனுக்கா நாம் மரியாதை செய்வது? அவனையா நாம் தெய்வம் என்று வணங்குவது? அவன் அனுப்பித்த இந்தக் கன்றுக்குட்டியை சபை மத்தியில் வைத்து பெருமைப் படுத்த உமக்கு லஜ்ஜையாயில்லையா? சடையன், மடையன், பித்தன், பேயன், சாம்பலாண்டி, அவனுக்குத் தான் யாருக்கு எப்படிப்பட்ட மரியாதை காட்டவேண்டும் என்று தெரியவில்லையானால் உமக்கும் தெரியாமற் போயிற்றோ? விடும், விடும் உமது காரியத்தை கன்றுக்குட்டிக்குப் புல்லும் கழுநீருமல்லவோ வேண்டும். சங்கரனுக்கு உரிய பூசனை இவனுக்கு எதற்கு? இவனுக்கு அதனைப்பெற என்ன உரிமை, என்ன யோக்கியதை உண்டு? தந்தாய், மூப்பின் மிகுதியால் அறிவிழந்தனை போலும்.

பிரம்மா :— தக்ஷா, என் புத்திரனைப் பிறந்தும் மதி கெட்டு அலைகின்றாய். கெடுமதியால் கேடு சூழ் கின்றாய். படுகுழியில் விழப் பார்க்கிறாய். சிவ தூஷணை செய்யாதேயடா. சிவனுக்குச் செய்யும் பூசனை சிவதூதர்க்கே, சிவனடியார்க்கே உரியது. நான் முறைப்படியே செய்தேன். பிசகொன்று மில்லை. வீணைகப் பிதற்றாதே பாபத்தை மூட்டை கட்டிக் கொள்ளாதே. விடு உன் அகந்தையை. சொன்னேன், சொன்னேன்.

தக்ஷன் :— போதும் போதும் உமது உபதேசம். தந்தையென விடுத்தேன் இல்லாவிட்டால் நசுக்கியிருப்பேன். இதோ நீர் காண ஓர் வேள்வி இயற்றி, சிவனொழிய மற்று திருமால் முதலான தேவர்கள் அனைவரையும் வரவழைத்து என் யாகத்தை நிறைவேற்றுகிறேன். வயது ஏறி விட்டதால் மூளையும் மழுங்கி விட்டது போலும்! என்ன மதி சொன்னீர் சுடு காட்டில் திரிந்து எலும்புகளை வாரி அணியும் சாம்பலாண்டியைப் பற்றி நீர் தான் பெருமையாகப் பேசிக் கொள்ள வேண்டும். நீர் பயங்கொள்ளி. தொடை நடுங்கி. அந்த அரன் உமது தலையைக் கிள்ளியதை எப் பொழுதும் ஞாபகத்தில் வைத்திருக்கிறீரா? அந்த நடுக்கம் உமக்கு இன்னும் தீரவில்லை போலிருக் கிறது. அது தான் அவனைப் பெருமையாகப் போற்றுகிறீர். அவனுக்கு மட்டுமில்லை. அவனால் அனுப்பப்பட்ட கன்றுக்குட்டியைக் கூட குன்றத் தனைஉயர்த்திப் பேசுகின்றீர்! போதும்உம்முடைய பேச்சு. பயப்படாதேயும். இந்த தக்ஷனை ஈன்ற உமக்கும் பயம் என்பது உண்டா? அண்ட சரா சரங்களும் பெயர் கேட்ட மாத்திரத்திலே நடுங்கும் என்னை மகனாய்க் கொண்டுள்ள நீர் பயப்பட வேண்டிய அவசியம் என்ன? பார்ப்பீர் விரைவில் எனது பராக்கிரமத்தை.

பிரம்மா :— அட, பாபி ! வாய்க்கு வந்தபடி பிதற்றுதே யடா ! 'மமதை' என்னும் அடங்காப் பிடாரி பிடித்தாட்டும் பேயே! நன் மொழி கேட்க மாட்டாய் இப்போது. காலபாசத்தைப் போட்டு மார்க்கண்டனை இழுத்த காலனைத் தனது இடது கால் கட்டை விரல் நுனியால் உந்தி ஏழ் கடற்கப்பால் தள்ளி உயிர் வாங்கிய அந்தப் பினாக பாணிக்கு அபராதம் செய்தோர் எவர் தாம் பிழைத்தார் ; வீணாக கர்வம் பேசாதே. 'அடாது செய்தோர் படாது படுவர் ; தேவாதி தேவன், திரி புராந்தகன். முக்கண் மூர்த்தியின் வல்லமை தெரிந்ததும் உன் செருக்கினால் இவ்வண்ணம் பேசுகிறாய். அழியுங் காலம் வந்துவிட்டது போலும். சிவனைத் தவிர்த்து ஒரு யாகமா; சிவன் இல்லாவிட்டால் யாகமேது ; யாக புருஷன் சிவனல்லவோ ! மதிகேடா ! ஒழிந்து போகாதே !

தக்ஷன் .— என்ன பேசினீர் ! எனக்கடங்கி, நான் செய்யப்போகும் யாகத்தை நடத்தித்தர இஷ்ட முண்டானால் இரும். இன்றேல் இன்றே இருப் பிடம் செல்லும். உம்முடைய சிவனிடமே அடைக் கலமாகப் போய்ச் சேரும்.

நந்தி :— தயாநிதே ! பூஜ்யரே ! பிரம்மதேவரே ! ஏன் இந்த வாதாட்டம் ; 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா ! அந்த மூர்க்கனுக்குபதேசம் செய்யத் தலைப்பட்டீரே ! அவன் உம் பேச்சைக் கேட்கப் போகிறானா ; ஆலகால விஷமுண்டோன் எம்பெருமான். அவன் தலைக்கேறியிருக்கும் விஷத்தை அடித்து இறக்கினாலொழிய அவன் அகந்தை ஒழியப் போவதில்லை. இவனிடம் என்ன பேச்சு ; ஆனால் என்ன செய்வது - 'பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்று உலகத்தார் சொல்வார்கள். அந்தக்

கல்லைக் கரைக்க உம்மால் ஆகுமோ! ஆகாது. ஆகாது. போவோம் வாரும்.

(பிரம்ம தேவரைக் கூட்டிக் கொண்டு தம் இருப்பிடம் செல்கிறார்.)

தேவர்கள் :— ஐயையோ! இது என்ன கஷ்ட காலம்! நம் பாடு திண்டாட்டமாய் விட்டது. பிரம்மன்பிள்ளைக்கும் பரமசிவனுக்கும் மத்தியில் நசுங்கவா! இரண்டு பேர் சாபமும் பொல்லாதது. இரண்டு மலைகள் ஒன்றோடொன்று மோதுங் காலத்தில் அவற்றின் மத்தியிலே அகப்பட்ட எலிக்குஞ்சுகளைப் போல ஆனோமே! நாளை தக்ஷன் யாகத்திற்கு அழைத்தால் போகாமல் இருக்க முடியுமா! போகாவிட்டால் நம்மைப் பொசுக்கி விடுவானே! கஷ்டம். கஷ்டம். விதி போல் ஆகிறது. செல்வோம்.

## காக்ஷி 8.

இடம் :— தக்ஷன் யாகசாலை.

காலம் :— காலை.

பாத்திரங்கள் :— ததீசி, தக்ஷன், திருமால், தேவர்கள் சேவகன்.

தக்ஷன் :— என்ன முனிவரே! என்ன? நீரும் அந்தப் பைத்தியக் காரக் கட்சியில் சேர்ந்து விட்டீரா என்ன? உங்கள் மனதிலெல்லாம் அந்தப் பித்தன் சிவனின் பிசாசு குடி கொண்டு அலைக்கின்றது. அந்தப் பிசாசை ஓட்டுவதற்கு நான் தான் மந்திரவாதி அதற்கேற்ற மந்திரக்கோல் என்னிடம் தானிருக்கிறது. நீரும், மூளையற்றுப் போன என் தந்தை மாதிரி பேச ஆரம்பித்து

விட்டீரே என் பராக்ரமத்தைத் தெரிந்து கொண்டு பேசுவீர் என்றல்லவோ நினைத்தேன். சீ! உமது புத்தி இருந்தவாறு!

ததீசி :— வாஸ்தவம். பிரம்ம புத்திரனுகிய உனக்கு உள்ள புத்தி எனக்கு வராது தான். வேறு எந்த சமயத்திலும் என் புத்தி கேட்டு நடக்கும் உன் புத்தி இப்போது மட்டும் ஏன் கெட்டுப் போய் விட்டது? என் புத்தியைப் பற்றி ஏளனமாகப் பேசும்படி தூண்டுகிறது. தக்ஷா! நான் சொல்லுகிறபடி கேள். வீணில் அழியாதே. பிரம குலத்துக்கே கேடு வருத்தாதே! அடங்கி நட. அடக்க முடையவரே மேலோர். துள்ளிக் குதியாதே. பரமன் பெருமையைப் பரக்கக் கூறு வேன் கேள். தேவாதி தேவன், பரமரௌத்ரன். ஆனல் பரம காருண்யன். அந்த மகாதேவனுக்கு என்ன அபராதம் இழைப்பினும், ஒரு தரம் 'சங்கரா! சம்போ!! உனது அடைக்கலம், ஸமஸ்தாபராதம் க்ஷமஸ்வ' என்று உண்மை யுடன் உள்ளுருகிச் சொன்னல் அவர் க்ஷமிப்பார். மேலும் உனது மருவு மகனுயிற்று அவர். உன்னிடம் கட்டாயம் கண்ணோட்டம் செய்வார். உனது கண்ணுக்கினிய அங்கயற் செல்வியின் கணவரல்லவா கண்ணுதல் பெருமான்! இனி அவரைப் பற்றி இகழ்தல் உன் பெருமைக்குப் பங்கம். உனக்கு நஷ்டமும் கஷ்டமும் ஆகும். ஆதலால் அவர்க்கு முதல் அழைப்பும், முதல் பூசனையும், முதல் உபசாரமும் நல்க வேண்டும். அதுவே உன் கடமை. பரம்பொருளே மருவு மகனைக் கொண்ட உன்னிலும் பாக்கியசாலி யார்? உடனே அவருக்கு அழைப்பிதழ் மரியாதையுடன், வரிசையுடன் அனுப்பு. அவரே அக்ர ஸ்தானத் துக் குரியவர். தக்ஷ! வீண் பிதற்றல் செய்யாதே. படுகுழியில் விழாதே. சொன்னேன்.

த :— ஹ....ஹ .. ஹ....ஹ.... நன்று ! நன்று !! நல்ல வார்த்தை சொன்னீர் ! பன்னீரும் வென்னீரும் மாறி மாறி ஊற்றி இந்தத் தக்ஷன் உறுதியைக் கலைக்கப் பார்த்தீர். என்னை இன்னும் நன்ருய் அறிந்து கொள்ளாத முனிவரே ! அப்பால் செல்லும். உம்முடைய யோசனையை நிறுத்திக் கொள்ளும். யார் அங்கே ?

சேவகன் .— யசமான் !

த :— திருமால் எல்லா தேவர்களுடனும் வந்திருக் கிருரா ? சீக்கிரம் வந்து சொல்

சே :— அப்பவே வந்து காத்துக் கிடக்கிருங்களே ! வாய் மூடி. உடம்பு நகலாத படி, இடிச்ச புளி மாதிரி, கண்ணே கொட்ட கொட்ட முளிச்சிக்கிட்டு! கொஞ்சம் நளுக்கு மிளுக்கு இன்னு பேசினுங்க. நான் தங்க பேரைச் சொல்லி தக்ஷராசா வராங் கன்னு சொன்னேன் ஒரே நடுக்கம். ஒரே வேர்வை. கூச்சல் கீச்சலெல்லாம் பொட்டுன்னு பொட்டிப் பாம்பாட்டும் அடங்கிப் போச்சு.

த :— பார்த்தீரா, ததீசி ! சேவகன் வார்த்தையைக் கேட்டீரா ? எனது ஆண்மையையும் வரத்தின் பலத்தையும் கண்டு கொள்ளும். தேவாதி தேவனுகிய திருமாலும், கீரியைக் கண்ட பாம்பு போல் படமொடுங்கிக் கிடக்கிருன் பாரும். அவனை விட உம்முடைய சிவன் வல்லவனே ? அந்த சாம்பலாண்டி என் மருமகனுயிருந்தா லென்ன ? பெருமைக்கு உரியவர்க்கு மட்டும் தானே பெருமை கொடுக்கலாம் ஒரு பெருமையும் அற்ற அந்தச் சாம்பலாண்டிக்கு, சுடுகாட்டுப் பித்தனுக்கு யார் பெருமை கொடுப்பார்கள் ? அதிலேயும் நானு பெருமை கொடுப்பேன் ?

ததீசி :— சரி. உன்னேடு பேச என்னல் ஆகாது. 'கேடுவரும் பின்னே, மதிகெட்டு வரும் முனனே.' மமதையால் மயங்கி, மாசடைந்து மரணத்தை மன்னிக் கொள்கிருய் மதிகேடா! போ. எனக்கு இங்கு இடமில்லை. போகிறேன்.

(போகிருர்.)

த :— நல்லது அந்தப் பயங்காளிக் கூட்டத்தில் போய்ச் சேர்ந்து கொள்ளும் திருமால் உள்பட, தேவர்களை வைத்துக் கொண்டு நான் யாகம் நடத்திக் கொள்கிறேன்.

தேவர்கள், திருமால் :— ஒழிந்தோம். இனித் தப்ப வழியில்லை. தக்ஷன் யாகத்துக்கு வந்ததும் போதும் நம் பாடு ஆபத்தாய் முடிந்தது. அன்றைக்கு நந்தி தேவன் சாபமிட்டான். அவன் கோபமும், சிவன் கோபமும் ஒன்று. சிவனை யாவது ஸ்தோத்ரம் செய்து ஸமாதானம் செய்ய லாம். நந்திக்குத் தப்பவே முடியாது இப் பொழுதோ, தக்ஷன் கையில் அம்மானையாய் அகப்பட்டுக் கொண்டு அல்லாடுகிறோம் அவன் தன்னையும் மாய்த்துக் கொண்டு, நம்மையும் மாய்ப்பது நிச்சயம் என்ன சொல்லுகிறீர்கள், தேவர்களே!

தேவர்கள் :— ஆம்! ஆம்!! அகப்பட்டுக் கொண்டோம். 'அகதிக்குத் தெய்வமே துணை'. ஆனல் இப் பொழுது எந்த தெய்வம் துணை யென்றுதான் தெரியவில்லை. காப்பாற்றப்பட்ட தெய்வம் ஒன்றையும் காணவில்லை நடப்பது நடக்கட்டும்.

## காக்ஷி 9.

இடம் :— கயிலை.

காலம் :— காலை.

பாத்திரங்கள் :— பரமசிவன், தாக்ஷாயணி, நாரதர்.

நாரதர் :— சம்போ! சங்கரா! நித்தியானந்த வஸ்துவே! அந்த ஆனந்தம் உமக்கு மட்டும்தானா? பசுபதியே! பதி ஆனந்தம் அனுபவிக்க பசுக்கள் வேதனைப் படுவது தான் முறையோ?

பரமசிவன் :— என்ன நாரதரே! என்ன விளையாடுகிறீர்? நம் ஸன்னிதானத்தில் பராசக்தி கூடியிருப்பதைக் காணவில்லையோ? பராசக்தி உள்ளவரை பசுக்களுக்காவது, பதிக்காவது ஆனந்தத்திற்கு என்ன குறை?

தாக்ஷாயணி :— வாரும் முனிவரே! கயிலைக்கு வந்து வெகு நாளாயிற்றே. எல்லா உலகங்களும் சுற்றி வருகிறீரா? சுற்றி வரும் வேலையிலேயே வெகு காலம் இருந்து விட்டீர் போலிருக்கிறது. பிரம்ம லோகம் போனீரா? யாவரும் சௌக்யமா? என் தந்தை சௌக்யமா?

நா :— அட, அட... நான் எதைச் சொல்ல இங்கு வந்தேனே, அந்த விசேஷத்தில் பாதியைத் தேவியே திருவாய் மலர்ந்தருளி விட்டாள். அதுவும் என் பாக்கியமே!

ப :— அதென்ன அத்தனை பாக்கியம்? அத்தனை பெருமையான விசேஷம் என்ன?

நா :— அந்த விசேத்தின் பெருமையை தங்களை விட தேவியல்லவோ குதூகலத்துடன் அனுபவிப்பாள்.

அதற்காகவல்லவோ நான் வெகு வேகமாய் இப்பொழுது வந்தேன்.

தா:— என்ன, நாரதரே! என்ன புதிராயிருக்கிறதே? தேவனுக்கில்லாத குதூகலம் தேவிக்கு என்ன வந்தது? சொல்லும் விரைவில். எப்பொழுதும் ஏதாவது நூதனமாக விசேஷம் கொண்டுவருவார் இந்தத் திரிலோக சஞ்சாரி.

நா:—ஆம், தாயே! நூதனந்தான், விசேஷந்தான். திரிலோக சஞ்சாரி நான்தான் கொண்டுவந்ததும்.

பர:— கொண்டு வந்தேன், கொண்டு வந்தேன் என்னும் பேச்சிலேயே இருக்கிறீரே தவிர, கொண்டு வந்த மூட்டையை இன்னும் அவிழ்க்க வில்லையே!

நா:— ப்ரபோ! பொறுக்க வேண்டும் இதோ அவிழ்க்கின்றேன்....தேவீ!.... தங்கள் தகப்பனுர் தக்ஷப்ரஜாபதி மஹாயக்ஞம் ஒன்று நடத்து கின்றூர். மஹா பெரிய யக்ஞம் மஹாவிஷ்ணு உள்பட தேவர்கள் யாவரும் அந்த யக்ஞத்தில் ஆஜர். பிரமபுத்திரன் அந்த யக்ஞத்தில் வீற்றிருக்கும் காட்சியும், ஸகலமான தேவ, அதி தேவர் களும் அவனுக்கு அடங்கி நடந்து யாகம் வெகு ஸம்ப்ரமமாய் நடக்கும் காட்சி கண்ணைக் கவர் கின்றது இந்த வைபவத்தில் தங்களையாவது. தங்கள் நாதனையாவது காணவில்லையே என்று ஏக்கம் கொண்டு, ஓடோடியும் வந்து இந்த நல்ல ஸமாசாரத்தைத் தங்களிடம் வந்து தெரியப்படுத்தி விட்டுப் போகலாம் என்று இவிடம் சேர்ந்தேன். அவ்வளவே!

தா:— உம்....உம் ... அப்படியா, நாரதரே! மிகுந்த நல்ல விசேஷம். இதை இவ்வளவு தயங்கித் தயங்கிச் சொல்வானேன்? எவ்வளவு மனசுக்

குகந்த சமாசாரம். வந்தவுடனே சொல்லியிருக்க வேண்டுமல்லவா முனிவரே!

நா:— இல்லை, தாயே! எல்லாம் பெரிய இடத்து ஸமாசாரம் எப்படியிருக்குமோ? அழைப்பு வந்திருக்கலாம். நீங்கள் ஏதாவது காரணம் பற்றி யாகத்திற்குப் போக ஸௌகரியம் இல்லாமல் இங்கு இருக்கலாம் அப்பொழுது நான் திடீரென்று யாகத்தைப் பற்றிச் சொல்லி விட்டால் அது பழங்கதையாய் விடும்.

தா:— அப்படி ஒன்றுமில்லை. நல்ல வேளையில், நல்ல காரியத்தை, நல்ல படியாகத்தான் சொன்னீர்கள் என் தகப்பனர் கட்டாயம் எங்களை அழைக்க ஒற்றரை அனுப்பித்தே இருப்பார். அவர்கள் வருவதற்குள் பரம சந்தோஷ சித்தரும், மஹரிஷியும், எங்களிடத்தில் பரம பிரேமையும் கொண்டுள்ள நீர் முந்திக் கொண்டீர். அவ்வளவுதான் தூதர் வரும் வரை நாம் காத்து நிற்பானேன்? என்ன பரம.. வாய் மூடிக் கொண்டிருக்கின்றீர்களே?

நா:— சரி. விஷயத்தையும் சொல்லி விட்டேன். தங்கள் இருவரையும் தரிசனம் செய்து விட்டேன். இனி உங்கள் காரியம் நான் உத்தரவு பெற்றுக் கொள்கிறேன். ப்ரபோ! தேவீ! வருகிறேன்.

(போகிறர்)

தா:— நாதா! நாதா!! நாரதர் கூறிப் போனது தங்கள் திருச் செவிகளில் விழவில்லையா? வாளா யிருக்கின்றீர்களே? பதில் ஒன்றும் இல்லையா?

ப:— ஆம் செவிகளில் நன்ருய் விழுந்தது. என்ன பதில் என்னிடமிருந்து எதிர் பார்க்கின்ருய்?

தா :-- ப்ரபோ ! என்ன சோதிக்கின்றீர்களா என்னை! தாங்கள் பதில் சொல்வதற்கு என்னையே யோசனைக் கேட்கின்றீர்களே? தங்களுக்குத் தெரியாதது இந்த அடியாளுக்கா தெரியப் போகிறது ?

ப :— அப்படியில்லை கண்ணே ! உன் தகப்பனர் செய்யும் யாகம். அதைப்பற்றி நான் என்ன கூற முடியும் ?

தா :— அது தான் எனக்கும் ஆசை. அதுவும் மஹாத்தான யாகம் என்றும், திருமால் முதலான தேவர்கள் கூடியிருக்கும் யாகம் என்றும் நாரதர் கூறிவிட்டார் பார்க்க வேண்டுமென்று எனக்கு மிகவும் ஆவல் உண்டாகிறது, நாதா !

ப :— அது தான் எனக்கும் தயக்கம். இந்த ஆவல் உனக்கு உண்டு என்று தெரிந்துதான் நான் பதில் ஒன்றும் கூறவில்லை.

தா :- என்ன, மஹேச ! இந்த ஆவல், ஆசை, எனக்கிருப்பது நியாயமில்லையா ?

ப :— அதற்கென்ன தடை ? உன் தகப்பனர் நியாயமாக நடந்து கொண்டிருந்தால் உன் ஆசையும் நியாயமானது தான்.

தா :— அவர் குற்றங்கள் பலவிதமிருக்கலாம். அவற்றைப் பற்றி யோசிக்க வேண்டியது அவர் பெண்ணுகிய எனக்கு என்ன முறை இருக்கிறது !

ப :— உண்மை. ஆனல் என் பெருமையோ, சிறுமையோ, இவற்றில் உனக்குப் பங்கு உண்டு என்பதையாவது நீ உணருகிருயா ? இல்லையா ?

தா :— இது என்ன நாதா ! புதுமையான கேள்வி. தங்களுடைய பெருமையையும், சிறுமையையும்

வைத்துத் தானே எனக்குப் பெருமையும், சிறுமையும். தாங்கள் இல்லாவிட்டால் அடியாள் ஏது?

ப :— நான் இல்லாதவிடத்தில் நீயும் இல்லையே?

தா :— பின் தாங்கள் அந்த யாகத்துக்குச் செல்வதாக இல்லை போலிருக்கிறது.

ப :— செல்லுதல் என் பெருமைக்கு இழுக்கல்லவா? அழையாத வீட்டில் நுழையச் சொல்கிறாயா?

தா :— என் தகப்பனார் தங்கள் அடியார் கூட்டத்தில் ஒருவரல்லவா? அவரை ஆட்கொண்டு பெருமைப் படுத்துதல் தங்கள் கடனல்லவா?

ப :— என் அடியார் கூட்டத்தில் ஒருவனாக அவன் தன்னை எண்ணிக் கொண்டிருந்தால் தானே! மமதை என்னும் பிசாசு பிடித்து உந்த அவன் எனக்கு உரித்தான ஆவிர்ப் பாகத்தைக் கூடக் கொடுக்காமலும், என்னால் அனுப்பப்பட்ட நந்தி தேவனை அவமதித்தும், என்னை விலக்கி யாகம் செய்யத் தலைப்பட்டும், என்னை வாயில் வந்தவாறு பழித்துக் கூறியும், என்னை யாகத்திற்கு அழையாமலு மிருக்கும்போது எனக்கு அங்கே என்ன வேலை? சொல்.

தா :— நாதா! தாங்கள் சொல்வது முற்றிலும் நியாயந்தான். இருந்தாலும் .... ....

ப :— அதற்கென்ன? உன் தகப்பனார் யாகத்திற்கு நீ செல்ல வேண்டியது அவசியந் தான். உன் இஷ்டம் போல் செல்.

தா :— தாங்களும் இல்லாமலா?

ப :— அதற்குத் தான் பதில் நான் சொல்லி விட்டேனே?

தா :— பின் நான் செல்லவாவது அனுமதி கொடுப் பீர்களா?

ப :— முற்றிலும் ஆனல் ஒன்று நன்ருகக் கவ னித்துக் கொள். என்னை மருமகனுக ஏற்றுக் கொள்ளாத தக்ஷன் உன்னைப் பெண்ணுகக் கருதுவானே என்பது என் சந்தேகம்.

தா :— என்ன, ப்ரபோ! 'பெண் என்ருல் பேயும் இரங்கும்' என்பார்கள் அதிலேயும் பெற் றெடுத்த பெண்ணை, அருமைப் பெண்ணை அவர் வரவேற்று அன்புடன் பாராட்டாமலா இருக்கப் போகிருர்'

ப :— அதென்னமோ, நான் சொல்ல வேண்டிய தைச் சொன்னேன். 'பெண்புத்தி பின் புத்தி' என்பார்கள். பின்பு வருந்துவதில் பயனில்லை. நீ போவதை நான தடுக்கவில்லை. ஆனல் போன பின் உனக்கு ஏற்படக் கூடிய கஷ்டங்களை நினைத்துத் தான் எச்சரிக்கை செய்கிறேன்.

தா :— எத்தனை பிடிவாத குணங்கள் இருந்தாலும், தன் பெண்ணை நிந்தித்துத் துன்புறுத்துவார் என்று எனக்குத் தோன்றவில்லை, நாதா!

ப :— ஆனல் சென்று வா.

## காக்ஷி 10.

இடம் :— தக்கன் மாளிகை.

காலம் :— நண் பகல்.

பாத்திரங்கள் :— தக்ஷன், தாக்ஷாயணி.

தாக்ஷாயணி :— தந்தையே! தந்தையே!! வந்தனம். தாங்கள் இயற்றும் மகா யாகத்தைப் பார்க்க ஓடோடியும் வந்தேன்.

தக்ஷன் :— நீ யார் ? 'கொல்லன் உலையில் ஈக்கு இட மேது ?' பொசுங்கியல்லவோ போகும். பித்தன் மனைவியாகிய பேதையே! உனக்கு இங்கே என்ன வேலை? உன்னை யார் அழைத்தது !

தா :— அப்பா! நான் தங்கள் பெண்ணல்லவா? தந்தையிடம் வர, பெண்ணுக்கு அனுமதி, அழைப்பு வேண்டுமா ?

த :— தந்தையுமில்லை. பெண்ணுமில்லை. அந்தப் பேயாண்டியுடன் என்று ஓடிப் போனாயோ அன்றே உன்னைப் பெண் என்ற முறையிலிருந்தும் ஒதுக்கிவிட்டேன். சீ ! என்முன் நில்லாதே. போ.

தா :— அப்பா ! சொல்லும் வார்த்தையை யோசித்துச் சொல்லுங்கள் தங்களுக்கு மருமகனாய் வாய்க்கப் பெற்ற அந்தப் பரம கருணாநிதியான பசுபதியின் பெருமையைத் தாங்கள் அறியாதவர்களா ?

த — அறிவேன் ! அறிவேன் !! பேய்க் கூட்டத்தில் ஆடும் பேயனை எனக்கு ஏன் தெரியாது அவனுக்கு வாழ்க்கைப்பட்ட நீயும் பேயே யல்லாது பெண்ணல்ல? உனக்கு தக்கமாபுரியில் இடமில்லை செல் அப்பால்.

தா :— இது காறும் தந்தையென வாதாடினேன். இனிப் பொறுக்க மாட்டேன். அகங்காரம் கொண்டு அலையும் அயன் மைந்தரே! நீர் அரன் அடி அணைந்தாலன்றி அழிவது நிச்சயம் மங்கையர்க்குத் தெய்வம் கணவனே என்னும் உத்தம நீதியை மறந்து அவர் குறிப்பை மீறி நடந்து இங்கு வந்ததற்கு இந்த அவமானம் அவசியம் வேண்டியதே. நான் செல்கிறேன். ஆனால் நீர்

பிழைக்க வேண்டுமானல், பரமனடி வீழ்ந்து அப ராத க்ஷமணம் வேண்டும். இல்லையேல் .... ....

த:— உளரும் நாவினைத் துண்டித்து உயிரையும் ஒழிப்பேன் உடன் ஒழி.

தா:— ஹா ! .... ஹா !! .... கொடுமை ! .... கொடுமை !!

(செல்கிறாள்).

த:— எனக்கு உபதேசம் செய்ய வந்து விட்டாள்! நீலத்தைக் கழுத்தில் வைத்துப் பிடித்த நீலி! குலப் பெருமையைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பு!

(மற்றொருபுறம் செல்கிறான்.)

## காக்ஷி 11.

இடம் :— கயிலை.

காலம் :— மாலை.

பாத்திரங்கள் :— பரமசிவன், தாக்ஷாயணி.

தாக்ஷாயணி :— (அழுது கொண்டே ஓடிவந்து) நாதா! நாதா!! தங்கள் குறிப்பறிந்து நடக்காது கெட்டேன். பாவியேன் உயிர் போகாது தரித்து நிற்கின்றேனே. ஐயோ ! பதி சொல் தாண்டிய பாவியானேனே உலகத்தில் கற்புடைய மங்கையர் எல்லாம் என்னைப் பார்த்து ஏளனம் அல்லவோ செய்வார்கள் ? 'பராசக்தி' என்று போற்றிய வாயால் 'பாவி இவள்' என்றல்லவோ தூஷிப்பர். தங்கள் சொல் தவறி நடந்து நான் கொண்ட அவமானத்தை என்னென்று சொல்வது ஐயோ ! ஐயோ !! நான் கெட்டேன் ! பாவி எனக்கு விமோசனமில்லை. யானை தன் தலையில்

மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளுதல்' போன்று என்னை நானே கெடுத்துக் கொண்டேன் தாங்கள் தகுந்த சமயத்தில் எனக்குக் குறிப்பாக உணர்த்தியும் அதையுங் கவனிக்காமற் போய் அவமானப் பட்டேன் தக்ஷன் மகள்தானே நான். அவனுக்கு உள்ள கர்வம் அற்ப புத்திதானே எனக்கும் இருக்கும் தங்களுக்கு மனமில்லாத காரியத்தைச் செய்ததால் நேரிட்ட அவமானத்திற்கு நானே பொறுப்பாளி. தக்ஷன் இனி எனக்குத் தகப்பனுமல்லன். நான் அவன் வயிற்றிற் பிறந்த தாக்ஷாயணியுமில்லை.

பரமசிவன் :— என்ன, கண்ணே! ஏன் அரற்றுகின்ருய்? ஏன் அலறுகின்ருய்? 'வருவது வந்தே தீரும்.' நடந்ததைப் பற்றி நினைந்து வருத்தமென்ன? உன் தகப்பன்தானே உன்னை அவமானப் படுத்தினன். வேறு யாருமில்லையே? பொறுத்துக் கொள்.

தா :— என் தகப்பனு! அவன் பாவி! மமதைபிடித்த பைசாசம். அவன் வயிற்றிற் பிறந்த பாபம் தீருவதற்கு ஒரு வழியுமில்லையா?

ப:— வழியில்லாமலென்ன? என்னையும் பங்கப் படுத்தி, அதற்கு மேல் என் பக்தர்களாகிய நந்தி தேவன், ததீசி முனிவர் இவர்களையும் பங்கப் படுத்தி, எல்லாவற்றிற்கும் மேலாக என் அடியாளாகிய உன்னையும் பங்கப் படுத்திய அவன் இன்னும் உயிருடன் இருக்கின்ருன் என்ரு எண்ணுகிருய்! வீரபத்திரனையும், காளியையும் அனுப்பித்தேன். அவர்கள் அவன் செய்யும் யாகத்தையும் அழித்து, யாகத்தை நடத்தி வைப்பவர்களுக்கும் தகுந்த தண்டனை அளித்து, தக்கன் உயிரையும் மாய்த்து வந்து விட்டார்கள். பாவம்! பாவம்!! பிள்ளைப் பாசத்தால், அந்தப் பிரம்ம தேவன்

கெஞ்சிக் கேட்டுக் கொண்டதற்காக, தக்கனுக்கு உயிர் கொடுத்து ஆட்டுத் தலை வைத்து, வாரணாசியில் கடுந்தவமிருந்து, நம்மை வந்து சரணடையும் படியாகக் கட்டளையிட் டிருக்கின்றேன். 'கெடுவான் கேடு நினைத்தான் கேடு சூழ்ந்தான். கேடே விளைந்தது' அக்கேட்டின் விளைவை ஆராயாமல் பெண் புத்தியால் நீ கெட்டாய். மேலும் முன்னால் ஒரு சமயம் நம்மால் ஓர் சாபம் பெற்றதையும் மறந்தாய். அந்தச் சாபத்தாலே நீ தாக்ஷாயணியாக இருந்து முடிவில் இந்தச் சங்கடத்திற்கும் ஆளானாய். வருந்திப் பயனில்லை.

தா :— நாதா! குற்றம் குற்றமே எனினும் எனக்கு விமோசனம் இல்லையா? ஐயோ! தங்களுக்கு வெகு அபசாரம் செய்த பாபியாகவா நான் திரிந்து உழல வேண்டும். இனி இந்த உடல் கொண்டு வாழ மாட்டேன். இந்த உடலை இப்பொழுதே தீயில் வாட்டி எரிக்கப் போகிறேன். அப்பொழுது தான் எனக்குப் பரிசுத்தம் ஏற்படும் கற்புடைய மங்கையர் எத்தனை பேர் தங்கள் கற்பை நிலைநாட்ட அவ்வண்ணஞ் செய்திருக்கின்றனர். தாக்ஷாயணி என்னும் பெயர் கொண்ட இவ்வுடல் ஒழியட்டும். இனி ஒரு ஜன்மம், மஹா புனிதையாக, தங்களை நோக்கித் தவம் புரிந்து, தங்களையே வந்து கணவராக அடைய அனுக்ரிஹிக்க வேண்டும். ப்ரபோ!

ப :— அப்படியே ஆகுக! அப்படியே ஆகுக!!

## காக்ஷி 12.

இடம்:— ஹிமவான் மாளிகை, ஹிமோத் பர்வதம.

காலம்:— காலை.

பாத்திரங்கள் :— ஹிமவான், மேனை, குழந்தை பார்வதி.

ஹிமவான் :— கண்ணே! கண்ணுள் மணியல்லவா நீ! பால் மணம் மாருத சிறு குழந்தையல்லவா நீ! அருந்தவச் செல்வியல்லவா நீ! உன்மேல் பிராணனை வைத்திருக்கும் தகப்பனையும், தாயாரையும் விட்டு விட்டு, தவம் செய்யவேண்டும். காட்டுக்குப் போகிறேன் என்று வாயெடுத்துச் சொல்வதை நாங்கள் எவ்வாறு சகிப்போம் பாவாய்! உன்னை முதன் முதலில் ஸரோருகத்தின்பால் கண்டபோதே நாயை கொண்ட பேரன்பும் பக்தியும் அளவிடற் பாலதன்று. நீ எங்கள் உள்ளங் கவர்ந்தாய்; பராசக்தியாய்த் தான் தோன்றினுய்; மெய்யுருவை மறைததுக் கொண்டாய்; பாலப் பொன்னுருவாக விளங்குகின்ருய்! பாலிகை யாயினும் நீ அறிவில் முதியாள். உலகுக்கு அறிவை வழங்கும் ஞானவல்லி என்பதை நான் அறிவேன். இருந்தாலும் உலக மாயை என்னை வாட்டுகிறது. ன்னைப் பிரிந்து நான் எவ்வாறு உயிர் தரிப்பேன்? பேதையாகிய அதோ நிற்கும் மேனையாகிய உன் தாய் எவ்வாறு உயிர் தரிப்பாள்? 'பூ வெல்லாம் உதிர்ந்து வாடிச் சோர்ந்து கிடக்கும் கொம்பு போல' அவள் தவிப்பதைப் பார். அவள் முகம் பார்த்தாவது நீ உன் தீவிர எண்ணத்தை விடமாட்டாயா?

மேனை :— கண்ணே! என் கண்ணே! செல்வமே! தவமாவது, நீயாவது! பொன்னூஞ்சலில் ஏழ

டுக்கு இலவம் பஞ்சு மெத்தையும், மல்லிகைச் செண்டும் உன் உடம்பிற்கு உறுத்தி வேதனை தருமென்றால் காடாவது, செல்லவாவது, கடுந் தவமாவது, செய்யவாவது; அதை என்னால் நினைக்கவும் முடியவில்லையே. உடலெல்லாம் நடுங்குகின்றதே. பட்டினியும், பசியும் வெய்யி லும், மழையும், பனியும் தாங்கித் தவம் செய்யும் வயது இதா! என் மடி மீதுறங்கும் பச்சைக் கிளியே! மழலைமொழி மாறாத இளந்தளிரே! தளர் நடை மாறாத மென்பிடியே! தவத்தை எதற்கோ நினைந்தாய்? எங்களை வருத்தவா. வேண்டாம்! வேண்டாம்!! நாங்கள் சொல்வதைக் கேள் நின்னைப் பிரிந்த நாங்கள் எப்படிச் சுகித் திருப்போம் இந்த மாளிகைக்கும் அரசுக்கும், குடிகளுக்கும் நீ கண் அல்லவா கண்ணை இழந்து விட்டு நாங்கள் தவிப்பதா வேண்டாம்.

பார்வதி :— தாயே! தாங்கள் வீணாகப் பரிதாபப் படு கின்றீர்கள். தந்தையும் கலங்குகிறார் தாங்கள் என்னைக் கண்ணாகக் கருதுகிறீர்களே! அந்தக் கண் இப்பொழுது தேவாதி தேவர்களும் தேடக் கிடையாத பெருஞ் செல்வத்தை யல்லவோ காண விரும்புகிறது. அது அந்தக் கண்ணுக்குப் பெருமையல்லவா என்னைக் கண்ணையும் பெண் ணையும் கொண்ட உங்களுக்கும் பெருமையல்லவா? ஏன் உங்கள் கண்ணாகிய நான், அந்தப் பெறுதற் கரிய காக்ஷியைக் கண்ணாரக் கண்டு ஆனந்தித்து, அந்தப் பரம கருணாநிதி, பரமானந்தத் தாண்டவ னின் பேரருளைப் பெறுவதினின்றும் நீங்கள் என்னைத் தடுக்கின்றீர்கள் கண் என்றால் கண் படைத்த பேறும் பெற வேண்டாமா? அம்மா, தாங்கள் என்னைச் செல்வமாக வளர்த்த பேற்றா லல்லவா எனக்கு அந்த அருட் செல்வம் கிடைக் கப் போகின்றது? ஆகையால் தடை யொன்றும்

சொல்லாமல் எனக்கு, அந்த எம்பெருமான், பினாகபாணி, கங்காதரன், நீலகண்டனை நோக்கித் தவம் புரிய அனுமதி தாருங்கள்.

ஹிமவான் :— (தனியே) ஆஹா! என்ன அழகான பேச்சு! என்ன மாதுரியம்! என்ன புத்தி நுட்பம்! என்ன விவேகம்! என்ன பக்தி! நம் பாக்கியமே பாக்கியம்!

(பார்வதியிடம்) பாவாய்! நீ சொல்வது எல்லாம் உண்மையே! எங்களுக்கு அதைத் தடுத்துச் சொல்ல வழக்கில்லை எனினும் உன்மீதுள்ள வாஞ்சையால், உன்னைக் கடுந்தவம் செய்ய இது பருவமில்லையே யென்று தடுக்கின்றோம் 'பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்பார்கள்.

பார்வதி :— பித்தல்ல, தந்தையே! அந்தப் பித்தனை நான் நேரில் கண்டு, பிறவிக் கடலைக் கடக்க வேண்டும் போது, என் மனம் கல்லுமல்ல என்பதைக் கண்டு கொள்வீர்கள். தங்கள் பெண் என்ற பான்மையால், உன்னதமான எண்ணத்தையே, உயர்வான கோரிக்கையே கொண்டேன்.

மேனை :— அப்பப்பா! இவளிடம் பேசுவது அசாத்தியம். நம் வார்த்தைகளை வைத்துக் கொண்டே, நமக்கிணங்கியும் இணங்காதது போலவும் நமக்கே சரியான பதில் தருகின்றாள்.

பார்வதி :— அன்னையே! பதிலுமில்லை, கேள்வியுமில்லை. இணக்கமுமில்லை, பிணக்கமுமில்லை அந்தப் பரமனின் பாதங்களை என் மனம் பற்றி விட்டது. இனி வேறொன்றையும் நான் நாடேன். வேறு ஒரு விதமான இக சுகங்களும் எனக்குச் சுகமாகத் தென்படாது. அதலால், என் இஷ்டப்படி தவஞ் செய்ய விடும்படி தங்களையும்,

அப்பாவையும் மிகுந்த தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்

ஹிமவான் :— நல்லது! உனது தீவிரமான கருத்து அதுவாயின் அப்படியே செய். இதோ, விரைவில் மலைச்சாரலில் தவக்கூடம் ஒன்று அமைத்து, அதில் உனக்கு ஏற்ற வசதிகள் அனைத்தும் அமைப்போம். உன் மனோரதம் விரைவில் நிறைவேறுமாக!

பார்வதி :— தந்தையே! ஏழையேன் மஹா பாக்கிய சாலி யானேன்! நான் செய்த தவமும் பலித்தது.

## காக்ஷி 13.

**இடம் :— வீரமாஹேந்திர புரம், சூரபதுமன் மாளிகை.**

**காலம் :— காலை.**

**பாத்திரங்கள் :— சூரபதுமன், தேவர்கள், திருமால், அயன்.**

சூரபதுமன் :— (களிப்பு) பஞ்சாக்னி மத்தியில் வஜ்ரக் கம்பத்தின் முனையில், ஒற்றைக் கால் ஊன்றி, ஆயிரம் ஆண்டு அரனை நோக்கித் தவம் புரிந்து அரிதிற் பெற்ற வரத்தின் மகிமையை இப்பொழுது தான் அனுபவிக்கின்றோம். அண்ட சராசரங்களும் 'சூரபதுமன்' என்னும் பெயர் கேட்ட மாத்திரத்தில் கிடுகிடு எனப் பதறி, நடு நடுங்கு மென்றால் நம் பெருமைக் களவுண்டோ? அரன் ஒழிய அரி, அயன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும் நம் கீழ்ப்பட்டு நம் ஆணைப் படி நடக்க வேண்டியவர்களல்லவா?

ஆ! தேவர்களை நசுக்கிப் பிழிகிறேன். அவர்கள் நம்மைவிட உயர்ந்தவர்கள் என்னும் எண்ணத்தை வேரோடு அறுத்து எறிகிறேன. நம்மை எதிர்த்துக் கொல்ல திருமால் முதல் யாவரும் சேர்ந்தாலும் ஆகாது என்றல்லவோ சாகாவரம் பெற்றிருக்கின்றேன். வரமளித்த அரனாலேயும் என்னை வதைத்தல் ஆகாது என்ருல் மற்றவர்கள் எம்மட்டு!

ஆஹா! என் குலத்தோர் வீரமே வீரம். என் பெருமையே பெருமை.

விடிந்து நேரமாயது. எங்கே இந்த தேவப் பசங்கள் ஒருவரும் வேலைக்கு வரக்காணேம். இவர்களை ஒரு ஆட்டு ஆட்டிவைக்கிறேன். யார் அங்கே?

சேவகன்:— மஹராஜ்!

சூ:— இந்திரன் முதலான தேவர்களும், பிரம்மாவும் வந்து விட்டார்களா? அவர்களை ஒரு நொடியில் இங்கு இட்டு வா!

(சேவகன் செல்கிருன்)

நேற்றுத் தான் அவரவர்கள் செய்ய வேண்டிய வேலைகளைத் திட்டம் செய்துள்ளோம். அவர்கள் பழக்க மில்லாததால் சற்று மறந்து விட்டார்கள் போலும்!

(தேவர்கள், பிரம்மா, இந்திரன் முதலியோர் சேவகனேடு வருகிருர்கள்).

ஓய், பிரம்மனே! அன்றன்று விடியுமுன் பஞ்சாங்கம் வாசித்து நாளும் கோளும் முறைப்படி பகரவேண்டு மென்று ஆக்ஞாபித்தேனே! அதை மறந்தீர் போலும்! உம்!

பிரமதேவன்:— புதுப் பழக்கம், புது வேலையாதலால் சற்று மறந்து விட்டேன். நாளை முதல் ஒழுங்காக நடக்கும்

சூ:— மன்னித்தோம் உஷார்! கிழவராதலால் விடுத்தோம். இனித் தவறினல் சிவன் கிள்ளியெறிந்த ஒரு தலைபோக, மீதியுள்ள நான்கு தலைகளையும் கொய்து, நரிகளுக்கு இரையாக்குவேன், தெரியுமா

பி:— அவ்வளவு எச்சரிக்கை யேண்டாம். விரைவிலேயே உனக்கு வரும் நாளைக் குறித்துச் சொல்லி விடுகிறேன்.

சூ:— இந்திரா! என்ன உன் வேலை? உனது தேவர்களை யெல்லாம் அவரவர்களுக்கு நான கொடுத்த வேலைகளைச் சரிவரச் செய்யும்படி பார்த்து வருகிருயா?

இந்திரன்:— ஆம்! சூரியன் தட்பமில்லாமல் வீசுகிருன சந்திரன் அவன் கடமையில் தவறுவதில்லை வாயு இளந்தென்றல் வீசுகிருன் அக்கினியோ உணவு சித்தஞ் செய்கிருன். மற்றையோரும் அவரவர்க்கிட்ட வேலையைச் செய்து வருகின்றனர் நானும் எப்பொழுதும் உஜாராத் தானிருக்கிறேன்.

சூ:— சபாஷ்! இறைச்சியும் மீனும் காலா காலத்தில் வருவதில்லையென்று மடைப்பள்ளியிலிருந்து ஆவலாதி வரக் காரண மென்ன?

இ:— மீன் பிடிக்கும் வேலை எங்கள் குலத்துக்குப் புதி தானதால் கொஞ்சம் நேரமாகிறது.

சூ:— இனிக் காலதாமதமாகக்கூடாது. ஜாக்கிரதை!

இ:— அப்படியே!

சூ:— அரனே! இவர்களை நடு நடுங்கச் செய்து இட்ட வேலையைத் தலைவணங்கிச் செய்யக் கூடிய பேற்றை அளித்ததற்கு உனக்கு நமஸ்காரம்.

(செல்கிறான்.)

(பிரும்மா, இந்திரன், தேவாகள்) இ:—ஐயோ! இதென்ன கொடுமை. இந்த முக்கண்ணரின் திருவிளையாட்டுத்தான் என்ன? தக்ஷன் மகள் தன்னை அக்னி கமனம் செய்துகொண்டது முதற்கொண்டே இவர் ஏங்கிப்போய் தவத்தில் இறங்கி, ஞானமூர்த்தியாய் ஞானபிரானாய், ஸனகாதி முனிவர்களுக்கும் மோன குருவாய் இருந்து, தக்ஷிண மூர்த்தியாய்த் தெற்கு நோக்கியிருந்து, சின்முத்திரை காட்டி உபதேசம் செய்த வண்ணம் இருக்கிறாரே! இவர் தெற்கு நொக்கி இருப்பதெல்லாம், தென்திசைக் காவலனான யமனுக்கு நம் உயிரைக் காட்டிக் கொடுப்பதாகத் தோன்றுகிறதே ஒழிய, நம் அவஸ்தையையும், அனுதினமும் நாம் படும் சகிக்க முடியாத துன்பத்தையும், இந்த சூரபதுமன் முதலான அரக்கர்களின் கொடுமையையும் அந்த முக்கண்ண மூர்த்தி அணுவளவேனும் கருதுகிறதாகத் தோன்ற வில்லையே! இந்தத் தவநிலை எப்பொழுது தீரும்? நம் துயரம் எப்பொழுது ஒழியும் அவரைக் காணலாமென்றாலோ கயிலையினுள் மன்மதன் ஒருவன் தவிர, ஈ எறும்பும் நுழையக் கூடாதென ஆக்ஞையாம் அந்த ஆக்ஞையை நிறைவேற்ற நந்தி தேவர் காவல். ஐயோ? நமக்கு விமோசனமே கிடையாதா? ஓய், பிரம தேவரே! நீர் தான் எல்லாவர்க்கும் பெரியவர் சூரபதுமன் மாளிகையில் பஞ்சாங்கம் வாசிக்கும் வேலை உமக்குத் திருப்தியா யிருக்கிறதா?

பி:— என்ன, இந்திரா! திருப்தியாயிருக்கும்! காலம் யாரை விட்டது? பொறு, விடுதலை வரும்.

ஆத்திரப் படாதே. அதுவரை துன்பத்தை அனுபவித்தே தீரவேண்டும் எல்லாம் வல்ல எம் பிரான் அந்த ஸர்வேஸ்வரனுக்கு நாம் படும் பாடு தெரியாதா? அவர் எப்பொழுது திருவுள்ளம் வைத்துக் காப்பாற்றுகிறாரோ அன்றைக்குத்தான் நமக்கு விடுதலை. பொறு!

இ:— நல்ல சமாதானம். பேஷ்! வாருங்கள் போக லாம். ஐயோ! பிரம்மதேவரே! நன்றாகப் பேசி னீர் எங்கள் தலை யெழுத்தை இப்படி அவதியுற வேண்டுமென்று நீர் தான் எழுதினீர். உம் தலை யெழுத்தையும் இப்படித் தான் எழுதிக் கொண் டீரோ! அதையாவது சீராய் எழுதிக் கொள்ள லாகாதா! வாரும் போவோம். சீக்கிரம். இல்லை யேல் சூரபதுமன் சவுக்கடி பட்டுச் சாகவேண்டும்.

## காக்ஷி 14.

இடம்:— சூரபதுமன் மாளிகை.

காலம்:— காலை.

பர்த்திரங்கள்:— சூரபதுமன், பானுகோபன், அஜ முகி, ஜயந்தன், தேவர்கள், சேவகன்.

சூரபதுமன்:— (கோபத்தோடு) ஹா! அப்படியா செய் தான் இவன்! அந்தப் பரமதுஷ்டன் யார்? என் ஆணைக்கு மீறி நடக்கும் துணிவு கொண்டவன் யார் உன் கையையா அறுத்தான்? மூக்கை யுமா கொய்தான் என்ன விருத்தாந்தம், சொல். சீக்கிரம் தங்கையே! ஆயிரத்தெட்டு அண்டங் களையும் நடு நடுங்கச் செய்யும் சூரன் தங்கையை அவமானப் படுத்தப் பட்டவர்களும் இன்னும் உயிருட னிருக்கிறார்களா? சொல் .... சொல் .... நடந்ததை

அஜமுகி :— அண்ணு ! .... அண்ணு ! .... நான் என்ன சொல்வது ? சீகாழி என்னு (டத்தில் அந்த அரன் க்ஷேத்திரத்தில் அரனையே துணையாகக் கொண்டு, தேவேந்திரன் தன் மனைவியாகிய இந்திராணியைத் தான் அருமையாக அமைத்துள்ள பூங்காவனத்தினுள் இரகசியமாக வைத்திருக்கிறன் அந்த நந்தவனத்தின் சிறப்பைக் கண்டு பிரமித்து உள்ளே சென்று பார்க்கப் போனபோது இந்திராணியைக் கண்டு, அவள் பேரழகைக் கண்டு, மிக்கப் பிரேமை கொண்டு, இப்படிப்பட்ட அழகுள்ள மங்கையைத் தங்களல்லவோ அனுபவிக்க வேண்டும் என்று தங்கள்பால் உள்ள நேசத்தால் ... ....

சூ :— ஆம் ! நாம் நன்கு அறிவோம். உனக்கு எம்பால் உள்ள சகோதர வாஞ்சையை .... பின் .... என்ன நடந்தது ? விவரமாகச் சொல்.

அ :— ஆமாம் ! ஆமாம் !' தங்கள்பால் உள்ள நேசத்தாலேயே அவளைக் கைப்பற்றி இங்கே தங்களிடம் சமர்ப்பிப்பதற்காக அணுகினேன்.

சூ : — உம் !

அ :— அணுகினவுடன் யாரோ ஒரு தேவன் .... அவன் ஸ்வரூபத்தை நினைத்தாலே எனக்கு உடல் நடுங்குகிறது.

சூ :— என் முன் நிற்கும்போது நடுங்க வேண்டிய அவசியம் என்ன ? அஜமுகி! தைரியமாகச் சொல். அவன் யாராயிருந்தாலும் உயிருடன் வைத்திருக்கிறேனு பார் !

அ :— யாரோ ஒருவன் திடீரென கர்ஜித்துக்கொண்டு வந்து, என மூக்கையும் கையையும், துண்டித்து விட்டு மறைந்து விட்டான். நானும் இதோ

கதறிக் கொண்டு, வலி பொறுக்க மாட்டாமல் வந்து நிற்கின்றேன் தங்கள் முன்பு.

சூ:— அவன் யாரென்று உன்னால் கூற முடிய வில்லையா?

அ:— ஒரு தேவன் என்றுதான் நினைக்கிறேன்.

சூ:— பானுகோபா! கேட்டாயா, உன் அத்தைக்கு ஏற்பட்ட அவமானத்தை!

பானுகோபன்:— தந்தையே! தங்கள் கட்டளைக்காகவே நான் காத்து நிற்கின்றேன். இந்த விஷமம் செய்திருப்பது அந்தத் தேவேந்திரன் மகன் ஜயந்தனாகத்தா னிருக்கவேண்டும் வேறு யாரும் இப்படிச் செய்யத் துணிய மாட்டார்கள். இதோ ஒருகை பார்க்கிறேன் அந்தக் குட்டிக் குரங்கைக் கட்டி இழுத்து வந்து சித்திரவதை பண்ணு கிறேன். உண்மை வெளிப்பட்டு விடும்

சூ:— பலே! பலே!! இப்பொழுது தான் என் மகன் ஆனாய்! சூரனுக்குப் பிறந்த அதி சூரப் பயல் நீ தாண்டா! பேஷ்! உன் இஷ்டப்படியே உடன் செல்; தாமதிக்காதே. அஜமுகி! பழிக்குப் பழி வாங்குவோம். பதறாதே!

அ:— எனக்கு என் மூக்கு வலியும், கை வலியும் இவைகள் போனதும் கூட பெரிய துன்பமாகத் தோன்றவில்லை அந்த இந்திராணியைத் தங்கள் பக்கத்தில் வைத்துத் தங்கள் இருவருடைய அழகையும் சேர்த்து வைத்துப் பார்க்க ஆசை கொண்டது வியர்த்தமாயிற்றே என்ற துன்பமே அதிகமாக இருக்கிறது. அண்ணா! என்ன அழகு! என்ன அழகு!! தெரியுமா? பொன் போன்ற மேனியும், அன்னம் போன்ற நடையும், குயிலைப் பழிக்கும் குரலும், கிளியைப் பழிக்கும் பேச்சும்,

மயிலைத் தோற்கடிக்குஞ் சாயலும், பவளவாயும், தாளப் பல் வரிசையும், நுண்ணிய இடையும். வேலை ஜெயிக்கும் கண்ணழகும். அண்ணு ! அண்ணு !! நான் நினைக்க, நினைக்க, இது என்ன தெவிட்டாத அமுதமோ, தேன்பாகோ, தித்திக்கும் கற்கண்டோ என்று தோன்றுகிறது

சூ:— ஆ! அப்படியா ? .... அப்படியா ? ....

சேவகன்:— அரசே! அரசே !! நம் இளவரசர் பானு கோபர் ஜயந்தனைக் கட்டி இழுத்துக் கொண்டு ஜயத்துடன் திரும்புகிறுர். இதோ வந்துவிட்டார்!

சூ:— ஸபாஷ்! பானுகோபா, ஸபாஷ்! இப்பொழுது தான் நீ உத்தம வீரன. குலப் பெருமையை நிலை நாட்டிய குலதீபம்!

(ஜயந்தனைப் பார்த்து) துஷ்டா, ஜயந்தா! அற்பப் பயலே! உன் விஷமமா இது? உன் அப்பன் படும் பாட்டுக்கு நீ எம்மாத்திரம்? முளைக்கும் புழுவே! என்ன சொல்லுகிறுய்?

ஜயந்தன்:— நான் ஒன்றும் அறியேன் இந்திரன் மகன் குற்றமறியான் என்பது உமக்குத் தெரியாதா?

சூ:— அட. பாம்புக்குட்டி நன்ருகச் சீறுகிறது. பெரிய தடி கொண்டுதான் புடைக்க வேண்டும்

ஜ:— எந்தத் தடிக்கும் இது சாகாது. இது தமக்குத் தெரியாதா?

சூ:— அடடா! பேச்சு மேலே மேலே உத்தண்டமாகத்தா னிருக்கிறது

ஜ:— உன்கையில் தண்டம் இருந்தால் என்ன? நான் உத்தண்டமாகப் பேசக்கூடாதா? அந்தத்

தண்டம் என் உத்தண்டத்தை ஒன்றும் செய்ய முடியாது.

சூ :— அடேய்! இந்தச் சிறு பயலுடன் வாதாடுவதில் பயனில்லை. என்னுடைய வீரத் தன்மைக்கு அழகுமில்லை. இக்கொசு எனக்கு எதிரியாவானு? இப் பூனைக்குட்டியை இழுத்துப்போய், காராக்ர ஹத்தில் அடைத்துத் தகுந்தபடி புடையுங்கள்.

ஜ :— இவ்வளவு தானு! ஹ... ஹ... ஹ... (சிரிக்கிருன்)

சூ :— பயந்தெரியாமல், என்னை யாரென்று தெரிந்து கொள்ளாமல், இக் குட்டிநாய் குரைக்கிறது.

ஜ :— நன்ருகத் தெரிந்துதான் பேசுகிறேன். குரைக்க வில்லை. வருகிறேன். 'மறம் வாழ்ந்ததில்லை: அறம் ஒரு நாளும் தாழ்ந்ததில்லை' தெரிந்து கொள்வாய் விளக்கு அவியுங் காலத்தில் படர்ந்து எரியத்தானே செய்யும்.

சூ :— இது என்ன! இந்த அற்பப் பயல் என்னென்னவோ தத்வம் பேசுகிருன்.

ஜ :— தத்வமில்லாததும் நேர்மையல்லாததும் தேவேந்திரன் மகன் வாயிலிருந்து வருமா?

(போகிருன்)

சூ :— உம்! உம்! 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவுதான்.' ஆனுலும்.... சூரனுகிய நான், அண்டங்களை நடுங்கச் செய்யும் நான், அழியா வரம் பெற்ற நான், அரன் அருள் பெற்ற நான் எதற்காக அஞ்சவேண்டும்:

## காட்சி. 15.

இடம் :— கைலையங்கிரிச் சாரல்.

காலம் :— அந்திப் பொழுது.

பாத்திரங்கள் :— சிவன் தக்ஷிணமூர்த்தியாய் இருத்தல், இநதிரன், தேவர்கள், மன்மதன், ரதி.

தேவர்கள் :— தேவாதி தேவனே! நம் துயர் நீங்குங் காலம் வரமாட்டாதா? எத்தனை காலம் நாம் இந்தப் பரம வேதனையை அனுபவித்துக் கொண்டிருப்பது? ஸஹிக்க வில்லையே!

இந்திரன் :— தேவர்களே! தினமும் சூரபதுமன் சவுக்கினுல் உதைப்பட்டு முதுகில் புண்ணேறி விட்டது. இனிப் பொறுக்க முடியாது அந்தக் கொடிய அசுர பிசாசுக்கு அமரவரம் கொடுத்த அண்ணல் அரனும் அற மூர்த்தியாகி, ஆரிய சிகாமணிகளாகிய ஸனகாதி முனிவர்களுக்கு அறமார்க்கம் தத்வோபதேசம் செய்துகொண்டு இருக்கிறுர். அவரை அண்டி அவதியை அறைகவோ அமயம் இல்லை அவர் கண்ணுக்கு மஹா பராக்கிரம சாலிகளான தாரகாக்ஷன், வித்யுன்மாலி, கமலாக்ஷர்களும் ஆற்ருராய்ச் சா பலானுல் நாம் எம்மட்டு என்ன செய்வது? தாக்ஷாயணி தீக்குளித்த ஏக்கத்தாலோ அந்த தயாநிதி தயை இழந்து நம்மவரை மறந்து யோகியாகி, தவக்கோலம் புனைந்து, மௌனங்கொண்டு, சின்முத்திரையால் உபதேசஞ் செய்து நிற்கின்ருர். அவரிடத்தில் நம் துன்பத்தைத் தெரிவிப்பது எப்படி? ஆ! ஸகோதரர்களே! ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வருகிறது மன்மதனைத் தவிர வேறு யாரும் தன்னை அணுகலாகாது என்பது அரன் கட்டளை. அந்த மன்மதனே தந்திரத்தில் கைதேர்ந்தவன். அவன் கை பாணமோ எப்படிப்

பட்ட பற்றற்ற பெருந் துறவிகளையும் மயக்கி, காமவேதனையடையச் செய்வது. அவனைப் பிடித்தால்தான் காரியம் ஆகும்

மன்மதன்:— தேவ தேவா! என்னையா சொல்கிறீர்கள்?

இ:— ஆம், வஸந்தா! உன்னையே தான்! உன்னையே தான்! உன்னைத்தவிர தேவர்களின் துயரைத் தீர்க்கவல்லார் வேறு யார் உளர்? நீயே சொல். உன் புஷ்ப பாணத்தின் மகிமை வேறு எந்த பாணத்திற்கு உளது?

ம:— அரசே! ஸ்தோத்ரம் போதும் ஏது, இந்த மன்மதன் ரதியோடு கூடி வாழ்ந்து உயிருடன் இருப்பது தங்களுக்கெல்லாம் பொறுக்க வில்லையா?

இ:— ஏது, அப்படிக் கூறுகின்றாய்? பொறுக்காமலா உன்னால் யாவர் துயரமும் தீரவேண்டும் என்று. நீயே இப்பொழுது தஞ்சம் என்று, கெஞ்சுகின்றோம்.

ம:— பேச்சளவில் எனக்குப் பெருமைதான். நடப்புத்தான் ....

இ:— ஏன்? நடப்பிலேயும் உன்னால் ஆகாததுண்டா?

ம:— ஆகும், ஆகும். அந்தப் பரமேஸ்வரனுடைய மூன்றாவது கண் தங்களுக்கு ஞாபகமில்லையா! அதன் சக்தி தங்களுக்குத் தெரியாததா?

பிரம்மா:— இந்திரனுக்காவது, எனக்காவது அந்த ஸாக்ஷாத் ஜகதீசனின் நெற்றிக் கண்ணின் சக்தி தெரியாதென்று நினைத்து விட்டாய்.

ம:— தெரிந்தால், என்னை அவரிடம் அனுப்பும் யோசனை தங்களுக்கு வருமா?

பி :— மன்மதா, என்ன பிதற்றுகிறாய், சூக்ஷமம் உணராமல்.

ம :— அரன் நெற்றிக் கண்ணின் சூக்ஷமம் தெரிந்து தான் பேசுகின்றேன்.

பி :— அந்த சூக்ஷமம் இல்லையடா, அது எம்மாத்திரம்?

ம :— என்ன பிரம்மதேவரே! அது எம்மாத்திரம் என்று கூறுகிறீரே! அதன் முன் உயிர் நிலைக் குமா? விளக்கின் அருகில் செல்லும் விட்டில் பூச்சிக்காவது ஒரு கணம் செல்லும் உயிர் நீங்க. சிவன் நெற்றிக்கண் திறந்தும் திறவாமுன் எதிர்ப் பட்டவை சாம்பலாவது திண்ணமல்லவா?

பி :— வாஸ்தவம், வாஸ்தவம். மன்மதா! ததீசி முனிவர் இந்திரனுக்காக முதுகெலும்பை தனுசாக அளிக்கவில்லையா? இன்னும் மற்றவர் க்ஷேமத் திற்காகத் தம் உயிரைத் தியாகம்செய்த மஹா புருஷர்கள் சரித்திரம் உனக்கு எத்தனை தெரியும்?

ம :— அதற்காக?

பி :— அந்த உத்தமக் கோஷ்டியாரில் நீயும் ஒருவ னகச் சேரக் கூடாதா?

ம :— என்னை உயிர்விடவா சொல்கிறீர்?

பி :— ஒரு வேளை அப்படி ஏற்பட்டாலும், அதற்கும் தயாராகத்தான் இருக்கவேண்டு மென்றுதான் சொல்லுகிறேன். பரமேசுவரன் கிருபைகொண்டு, உன்னை எரிக்காமல், நீ வந்த காரியம்வினவி, நம் மீது கிருபை பாலித்தால், யாவர்க்கும் பாக்கியம். நீமட்டும் உயிர் இழந்து, நாங்கள் க்ஷேமம் உற்றால் பலகோடி தலைமுறைகள் உனக்கு பரோபகாரி, தேவர்கள் துயர்தீர்க்கத் தன் பொன்னுடலை நீத்த உத்தமன் என்னும் புகழ் ஸம்பத்தும் கிடைக்கும்.

"ஈதல் இசைபட வாழ்தல்; அஃதன்றி வேறு ஊதியம் உயிர்க்கில்லை" 'தோன்றினுய், இனி புகழொடு தோன்று' செல் வீணயோசனை வேண்டாம். காலதாமதம் வேண்டாம். எங்கள் முப்பத்து முக்கோடி பேருக்காக உன் ஒரு உயிரைத் தியாகம் செய்யவேண்டி வந்தால் அதற்கு நீ உடன்படலாகாதா? தயங்காமல் செல்.

ம: — மறை வகுத்த அண்ணலே! தேவாதி தேவனே! தேவர்களே! அயன் அமுதவாக்கிற்கு இசைகிறேன் இதோ செல்கிறேன் உங்கள் அனைவர்க்கும் நமஸ்காரம்.

(தேவர்கள், பிர்மா செல்கிருர்கள்).

(தக்ஷிணுமூர்த்தி முன் மன்மதன். புஷ்ப பாணம் தூவல். சிவன் கோபம். முக்கண் திறத்தல்).

ம:— ஹா .... ஆ .... ஆ .... ஆ....ப்ரபோ!...ஸாம்ப!....

(ஒரு பிடி சாம்பலாய் வீழ்கினருன்).

ரதி :— ஐயோ! ஐயோ!! நாதா! நாதா!! ஆ .... ஆ .... நான் எங்ஙனம் உயிர் வாழ்வேன்! ஒரு பிடி சாம்பலானீரே! தேஜோன்மயமான உங்கள் பொன்னுருவத்தைக் கூடக் காணவில்லையே! ஐயோ! அன்பரே! எங்கு சென்றீர்? என்னை எப்படிப் பிரிந்தீர்? 'நகமும் சதையும், மணமும் மலரும், கதிரவனும் ஒளியும்' போன்று வாழ்ந்து வந்த நம் வாழ்வு பொய்யாயிற்றே! ஒப்புயர்வற்ற நம் வாழ்விற்கு இத்தகைய முடிவு வரும் என்று நான் கனவிலும் கருதவில்லையே! அந்தோ! என் கண்ணு r, கருத்தும், பொருளும், பயனும் நீரல்லவா! நான் எப்படித் தங்களைவிட்டு இருப்பேன்? ஐயோ! இதுவோ என் தலைவிதி! ஆ .... ஆ ....

சிவன் :— ரதியே! அஞ்சேல்! அஞ்சேல்!! உன் கற்பின் திறனை அறிவோம்! உன் மனம் நிறைந்த வள்ளலை, உன் அரும் மணாளனை, தேவர் உய்யத் தன் உடல் நீத்த தவத்தியாகியை, மன்மதனை, உனக்களிப்போம். கவலுறேல்! இமயத்தில் இணையில்லாத் தவமியற்றும் இன்பவல்லி, இமையன் பாவை, பார்வதியை யாம் மணக்கும் புண்ணியம் உன் நாதனைச் சேர்ந்தது. எம் மகிழ்ச்சியும் எம் தேவியாகப் போகும் பார்வதியின் மகிழ்ச்சியும் உன் கணவனுக்கே உரித்து. மலையன் மகளை மணக்கும் அமயம் உன் மணாளனையும் தருவோம். அஞ்சாதே செல்வாயாக!

ரதி :— மஹாத் பிரபோ! சரணம் சரணம். என் நெஞ்சில் பால்வார்த்த நீலகண்டா, சரணம்.

## காக்ஷி 16.

இடம் :— இமயமலைச் சாரல், பார்வதி தவச்சாலை.

காலம் :— அந்திப் போழ்து.

பாத்திரங்கள் :— கிழட்டு வேடம் கொண்ட சிவன், விஜயை (பாவதியின் தோழி), பார்வதி, இமவான்.

கிழவன் :— ஹர, ஹர! சங்கரா! ஸாம்பா! ஸச்சிதானந்தா! அப்பாடா! உஸ் .... உஸ .... என்ன கோடை! என்ன கானல்! வெயிலெல்லாம் நடந்து, காலும் சோர்ந்து, கண்ணும் தூசடைந்து, சரீரமும் களைத்து நாவும் வறண்ட என்னை இந்த அருமையான ஆச்ரமம் எவ்வளவு அழகாக வரவேற்கின்றது. ஹரோஹர! ஈசா! சம்போ! எல்லாம் உன் கிருபை. உன்னை நம்பினோரைக் கைவிடுவாயா? அப்பாடா! என்ன அருமையான நிழல்! (அமர்கிறார்).

பார்வதி :— (தவச்சாலை உள்ளிருந்து) அடி விஜயை' அடி விஜயை! வெளியே சென்று பாரடீ! சிவ நாமம் கேட்கிறது ஏதோ வயதானவர் பேச்சு மாதிரியும் கேட்கிறது. புருஷர்கள் வராத இடத்தில் ஒரு முது கிழவர் தட்டித் தள்ளாடி வழிதப்பி இளைத்து எப்படியோ வந்துவிட்டாற் போலிருக்கிறது. ஐயோ பாவம்! உடன் சென்று பாரடீ!

விஜயை :— இதோ இதோ போகிறேன்.

பாாவதி :— வெறுங் கையோடு போகாதே பாத ப்ரக்ஷாளனத்திற்கும், அர்க்ய பாத்ய ஆசமனீயத்திற்கும் தீர்த்தமும், புஷ்பம், மங்களாக்ஷதை, தூப தீபமும் க்ஷீரப்ராசனத்திற்கு வேண்டியவற்றையும் கொண்டு போ நானும் இதோ வருகிறேன்.

வி :— அப்படியே. (கிழவருக்கு உபசார மெல்லாஞ் செய்கிறாள்). தாத்தா! வெகு தூரத்திலிருந்து இந்தக் கடும் வெய்யிலில் வழி நடந்து இளைத்திருக்கிறாப்போல் இருக்கிறது பாவம்! உள்ளே வாருங்கள். சொற்ப ஆகாரம் உட்கொண்டு, விஸ்ராந்தி செய்துகொண்டு போகலாம்.

பா :— ஆமாம் ஐயோ பாவம்! தொண்டு கி ,வர். பரமசிவ பக்தர். எங்கேயோ வழிதப்பி வந்து விட்டார்

கி :— இல்லை! வழிதப்பி வரவில்லை! வழியோடுதான் வந்தேன் .... உம் .... உம் .... அப்பாடா! குழந்தைகளா நீங்கள் யார்? நல்ல குழந்தைகளா யிருக்கிறீர்களே! இங்கே தனியாய் இருக்கிறீர்களே. உங்களுக்குத் துணை யாரும் இல்லையா? நீங்கள் இங்கே என்ன பண்றேள்?

வி :— தாத்தா. தாத்தா! இங்கே இந்த ஆஸனத்தில் அமருங்கள். சரியாயிருக்கா.

கி :— சரியாத்தான் இருக்கு. சரியில்லாமல் இருக்குமா, அம்மா! பாவம்! உங்களுக்கு எவ்வளவு அன்பு! அன்பு அப்படியே பொங்கிப் பொழிகிறது. ஆமாம், நீ யாரம்மா?

வி :— இவர் எங்க யஜமானி. மலையராஜன் ஹிமவானின் புத்திரி. இங்கே தவஞ் செய்து கொண்டிருக்கிருர், ஸாக்ஷாத் ஜகதீசன் கருணமூர்த்தி பரமேஸ்வரனை நோக்கி. நான் அவள் தோழி விஜயை.

கி :— விஜயையா உன்பேர் ஜயந்தான். அவள் பர்வதராஜன் புத்திரி, உம் ... பார்வதி இல்லையா? நல்ல குழந்தை! இவ்வளவு பால்யத்தில் தவம்.... என்ன உத்தேசமோ?

பா :— உம் .... விஜயை! விஜயை!! இதோபாரு. என்ன, வெட்கமாயிருக்கு, சொல்லாதே

கி :— என்னது, எனக்கு ஒன்றுமே தெரிய வில்லையே! என்ன அவள் சொல்லாதே என்குருள்.

வி :— இல்லை, இல்லை.

பா :— போடி சொல்லாதேடி.

வி .— அதனுலென்னடி பழுத்த பழம் பெரிய தாத்தா, சிவதேஜஸ். அவருடைய சிவநாம ஸங்கீர்த்தனம் ஒன்றே போதும். அவரிடத்தில் சொன்னல் என்னடி வந்துடுத்து? இப்படிப்பட்ட பெரியவாள் ஆசீர்வாதம் பண்ணினல் கட்டாயம் பலிக்கும். உன் நோன்பு பலித்தது. உன் தபஸ் வெற்றி யடைந்தது, இந்தத் தாத்தா வருகையால்.

தாத்தா! எங்கள் அரசி அந்த சங்கரன், சம்பு, மகாதேவனை மணக்க வேண்டும் என்று தவம் புரிகிருள்.

கி :— அடடா! அடடா!! பாவம்! பாவம்!! கெட்டுப் போச்சு. காரியம் குடிமோசம் போச்ச. நான் நல்ல சமர்த்துக் குழந்தை பார்வதி என்று எண்ணினேன். இவ்வளவு அசடு என்று தெரியவே தெரியாதே

வி :— என்ன தாத்தா என்ன தாத்தா, என்னென்னவோ பேசுகிறீர்களே?

கி :— என்ன, பார்வதி! உன் தோழி கூறியது உண்மை தானு?

பா :— அந்தக் கைலேயங்கிரி வாஸனைப் பெறும் பேற்றைவிட மேலான பாக்கியம் ஒன்று உண்டா? தாங்கள் முதியவராச்சே, சொல்லுங்கள்.

கி :— நானே முதியவன். ஆதலால் என் பேச்சைக் கேட்பாய் என்று நினைக்கிறேன் கேட்பாயானல் சொல்லுகிறேன்.

பா :— என்ன சொல்லப் போகிறீர்கள்?

கி :— குழந்தாய்! நீயோ அருந்தவச் செல்வி! ஆரிள மங்கை! பொன்னையும் பூவையும் ஒத்தவள். அழகில் குணத்தில் செல்வத்தில் யாவற்றிலும் சிறந்தவள் .... அது இருக்கட்டும். உன் தந்தை தாய் இந்த உன் தவத்திற்குச் சம்மதித்தார்களா?

பா :— ஏன், சம்மதத் தோடுதான் அனுப்பித்தார்கள்.

கி :— பாவம்! அவர்கள் மதியுமா கெட்டுப்போய் விட்டது! பார்வதி! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் இரக்கமாயிருக்கிறது.

பா :— ஏன், தாத்தா?

கி :— கிள்ளையை வளர்த்துப் பூனை கையில் கொடுப்பார்களா?

பா:— அப்படின்னு ?

கி:— அவன் பூனையுமல்ல, பிசாசுக் கூட்டத்தின் மத்தியிலிருந்து கூத்தாடும் பேயாண்டியல்லவா? பாம்பையணிந்து கொண்டு, எலும்புக்கூட்டு மாலை யும் சாத்திக் கொண்டு, சுடுகாட்டுச் சாம்பலை உடல் முழுதும் பூசிக்கொண்டு, தீயைக் கையில் எப் பொழுதும் ஏந்திக்கொண்டு, யாரும்கண்டு அஞ்சக் கூடிய திரிசூலத்தைக் கையில் வைத்துக்கொண்டு, கப்பறை ஏந்திப் பிச்சை எடுக்கும் பித்தன், பிக்ஷு, பேயனையா உனக்கு மணாளனாக நாடு கிறாய்? நன்று! நன்று!! உன் புத்தி போன போக்கு! பரந்த சடையை விரித்து, புலித்தோலை யும் யானைத் தோலையும் உடுத்திக்கொண்டு அவன் ஆடினால் பூதகணங்களும் நடு நடுங்கி ஓடுமே! அப்படிப்பட்டவனா உனக்குக் கணவனாக வேண்டும்

பா:— சிவ, சிவ! போதும், போதும்! கிழவரே! உமது வார்த்தையை நிறுத்துமே.

கி:— அம்மா! என் வயதுக்கும், அனுபோகத்துக்கும் கண்ணில் கண்ட குறையைச் சொல்லித்தானே ஆகவேண்டும்!

பா:— வேண்டாம்! வேண்டாம்!! வேண்டாம்!!!

கி:— நீ வேண்டா மென்றாலும் என் மனது துடிக் கின்றதே. நீ யாரைக் குறித்துத் தவம் கிடக்கி றாயோ அவனுக்குச் சொத்து உண்டா? செல்வம் உண்டா? இருக்க இடம் உண்டா? உடுக்கத் துணி உண்டா? உனக்குப்போட அல்லது தனக்குச் சாப்பிடத்தான் உணவு உண்டா?

பா:— போதுமே! கர்ண கடூரமாயிருக்கிறதே!

கி:— அவன் துணைகளெல்லாம் பைசாசங்கள்! அவனே ஊர்சுற்றி! அனாதை! அவனைச் செருப்

பாலும், கல்லாலும் கட்டையாலும், பிரம்பாலும் உதையாதார் இல்லை இந்தப் பைத்தியத்தைத் தேடித் தவம் வேறையா? அழகு! அழகு!! குழந்தாய், கெட்டுப் போகாதே சொன்னேன்.

பா:— விஜயா, தாங்க முடியவில்லை. வெளியில் தள்ளி விடுவோம் என்றாலும், கிழவராயிற்றே. உயிரை விட்டு விட்டால் ப்ரம்மஹத்திக்கு ஆளாவோமே! இது என்ன தர்மசங்கடம்.

பரமகருணாநிதே! சங்கரா, இது என்ன சோதனை? என் தவம் பொய்யா நான் பொய்யா, நீ பொய்யா இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு எப்படி இருப்பேன்? சிவாபராதம், சொன்னவர்களுக்கு மட்டுமா; சிவநிந்தையைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்குந்தானே உண்டு. என்னை இந்த க்ஷணம் காப்பது உனது கடமையல்லவா ப்ரபோ! உன்னைச் சரண்புகுந்த அடியாளைக் காப்பது உன் கடமையல்லவா? என் தயக்கத்தை நீ அறியாயா? பகவானே! பகவானே!

(மூர்ச்சையாகப் பார்க்கிறாள்).

வி:— அம்மா! அம்மா!! இது என்ன புதுமை! இது நனவா, கனவா? தாயே, அதோ பார். எம்பெருமான் பசுபதியின் தரிசனம்.

பா:— என்ன, என்ன! உண்மையாகவா? (கண்ணைத் துடைத்துக் கொண்டு) உண்மைதான்! உண்மைதான்! ஸந்தேகமில்லை, ஸந்தேகமில்லை ஸாக்ஷாத் சிவபெருமானே என் கண்முன்! என் உள்ளங் கவர்ந்த கள்வன் இதோ நிற்கிறான். விடையேறும் பெருமான் அதோ! கயிலையுடையான் அதோ! கங்கை சூடி கொன்றைவேணி ருத்ராக்ஷம், ஸர்ப்பாபரணம், இளம்பிறை, செவ்வானின் ஜோதி, கையில் மான், மழு, சிவனே, சங்கரனே,

ஸர்வேசா! நான் காண்பது என் மனம் தேடிய நீ தானு? என்னை ஆட்கொள்ளவே, நாயேன் என்னை நாடி வந்தனையா? கருணுநந்த, கிருபா ஸாகர, ஆ .... ஆ .... அந்த முதியவரை எங்கே?

வி :— காணேமே! காணேமே!! எங்கும் காணேமே!!!

பா :— அம்முதியவராய் வந்தவரே எம் பெம்மான்! அவன் அருளை யாரே அறிவர்? அவன் திறத்தை வகுத்தார் யார்? என் தவப் பொருளே, ஏழை என்னென்னமோ பிதற்றினேன். வாய்க்கு வந்த படி சொன்னேன். உளத்திற் கொண்டாயோ?

சிவன் :— பாவாய்! அஞ்சேல்! உன்னை யாட்கொள்ளவே வந்தோம் உன் சித்தத்தைச் சோதனை செய்தோம் நம்பால் கொண்ட திட சித்தத்தைக் கண்டு மகிழ்ந்தோம். ஸந்தோஷம்! விரைவில் நீ கோரியபடி உனை மணப்போம். இனித் தவம் வேண்டாம். உன் மாளிகை செல்வாய்!

(மறைகிறுர்).

ஹிமவான் :— (விருதுகளுடன்) கண்ணே! நான் கண்டது கனவா? இல்லை அப்பரமன், எனையாளும் அடியார்க்கடியன், மஹாதேவன், என்முன் தோன்றி உன்னை மணக்க வருவதாயும் உன்னை ஸம்ப்ரமத்துடன் மாளிகைக்கு அழைத்துபோக வேண்டுமென்றும் ஆஞ்ஞையிட்டாரே!

பா :— தந்தையே! தமக்கும் மகளாயிருக்கும் பாக்கியத்தினுல் அச்செல்வனைக் காணும் பேறு பெற்றேன். இப்பொழுதுதான் மறைந்தார். அவர் தங்களிடம் சாற்றியருளியது முற்றிலும் உண்மையே! பரம கருணை வள்ளல்! அவர் அருளை என்னென்றறைவது!

ஹி :— கண்ணே, நீயே பாக்கியசாலி! நீயே பாக்கியசாலி!

## காட்சி 17.

இடம் :— ஹிமவான் மாளிகை (பார்வதி மணம்).

காலம் :— பகல்.

பாத்திரங்கள் :—ஹிமவான், மேனை, பார்வதி, பரமேஸ்வரன், பிரம்மா, தேவர்கள், அகஸ்தியர், ரதி.

பிரம்மா :— ஹிமவான்! உன்னைப்போல பாக்கியசாலி இந்த ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் இல்லை. ஸாக்ஷாத் பரமேஸ்வரனை மருமகனாகக் கொண்ட உன்னைக் காட்டிலும் உயர்ந்தவர் யாவர்?

ஹிமவான் :- அயபிரானே! வேதமுதலே! முதியோனே! யாவும் உம் அருள். தேவரீர் கிருபையால் நிகழ்ந்தவையே யாவும்.

பி :— பர்வதராஜனே! முகூர்த்தவேளை யாகிறது.

ஹி :— 'இயம் கன்யா மமஸுதா
ஸஹ தர்ம சரீதவ
ப்ரதீச்ச சைனம் பத்ரந்தே
பாணிம் க்ரண்ணீஷ்வ பாணிநா'

ப்ரபோ! தாம்தந்த செல்வத்தைத் தாங்களே அங்கீகரிப்பீர்களாக! தங்கள் பொருட்டே இச் செல்வத்தைக் காத்து வந்தேன் இச் செல்வத்தை அவள் செய்துள்ள தவத்துடன் சேர்த்து தங்களுக்கே அர்ப்பணம் செய்கிறேன் தன்யோஸ்மி; தன்யோஸ்மி!! ப்ரபோ! ஏற்றருள்க!

பரமசிவன் : — அரசே! மிகுந்த மகிழ்ச்சி யடைந்தோம். தேவர்காள்! உங்கள் துயரைத் துடைக்கவே இவளை மணந்தோம்.

ரதியே! இனி உன் கணவரைத் தந்தோம். அவருடன் இன்புற்று வாழ்வாயாக!

அகஸ்தியரே!

அகஸ்தியர் :— பெருமானே!

ப :— முனி சிரேஷ்டரே! எமது மணம் நாடிவந்த ஜீவர்களின் பாரத்தினுல் புண்ணிய பூமியின் வட தலை தாழ்ந்து தென் தலை உயர்ந்தது காணீர்! நீர் சென்று பொதியமலை மேவி நின்று சமநிலை ஆக்குவீர்

அ :— ப்ரபோ! தங்கள் கட்டளையைச் சிரமேற்கொண்டேன். ஆனல் ....

ப :— என்ன தயக்கம்?

அ :— ஒன்றுமில்லை தங்கள் திருமணக் கோலத்தைக் காணக் கொடுத்து வைக்காத பாவியா நான் ....

ப :— அப்படியா? பாவியென்று முனிவர் சிகாமணியாகிய உம்மை யார் சொல்வர்? மகா புண்ணிய சாலி யல்லவோ நீர்! இந்த உபகாரம் செய்து வைக்கும் உம்முடைய மேன்மையை மெச்சி இரவு ப்ரவேச ஹோமத்தை நிறைவேற்றுவதற்கு யாம் பார்வதியுடன் பொதிகைமலை எய்தி நம் திருமணக் கோலக் காட்சியை உமக்குக் காட்டி அருள்வோம்.

அ :— தன்யனுனேன். ப்ரபோ! உத்தரவு. இதோ செல்கிறேன்

ப :— இன்னும் ஒ காரியம் உமது பேரன்பினுல் ஆகவேண்டிய துண்டு எம் சூரிய சந்திர லோகங்களில் ஒன்று போலும், எம் மனதுக் கினியவும், எம் உளம் பொங்கிய மகிழ்வால் அமிழ்தம் போன்று திகழ்ந்ததாகிய தமிழ பாஷையைத்

தென்னாட்டில் பரப்புவீர்! உமக்குத் துணையாக எம் சக்தி வடிவை விரைவில் அனுப்புவோம். கேட்டீரா?

அ:— நன்றாய், ப்ரபோ! என்னைச் சிறக்கச் செய்தீர். அனந்த கோடி நமஸ்காரம். இதோ செல்கிறேன்.

## காக்ஷி 18

இடம்:— கயிலை.

காலம்:— காலை.

பாத்திரங்கள்:— தேவர்கள், சிவபெருமான் பார்வதி.

தேவர்கள்:— ப்ரபோ! எத்தனை நாள் நாங்கள் இந்த நரக வேதனையை அனுபவிப்போம்? தாங்க முடியவில்லையே 'சாகா வரம் பெற்று விட்டோம்' என்ற கர்வத்தினால் அந்தக் கொடிய சூரபதுமன் எங்களைப் படுத்தும் பாடு அந்த ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனாலும் கூறமுடியாது.

சிவபெருமான்— ஆ! சாகாவரமா? யார் உங்களுக்குச் சொன்னது?

தே:— அந்த அரக்கர் தலைவனே அடிக்கடி அடிக்கடி அண்டமும் அச்சமுற அறைகிறானே! பின், வேறு யார் சொல்ல வேண்டும்?

சி:— தேவர்களே! அறியாமையால் அவன் பிதற்றினால் அதைக்கேட்டு நீங்கள் பேதுறுவது ஏன்?

தே:— தேவாதி தேவனே! அறியாமையோ, என்னவோ? நாங்கள் அறியோம். ஆனால் நாங்கள் படும் அவதிக்குக் குறைவில்லை.

சி:— உங்கள் கஷ்டம் உங்கள் வினையால் ஏற்பட்டதென்று உங்களுக்குத் தெரியாதா? "தன் வினை தன்னைச் சுடாதா?" வேதங்களையும், சாஸ்திரங்களையும், அந்த மமதை பிடித்துத் திரிந்த தக்ஷனுடன் சேர்ந்துகொண்டு பொய்யாக்க முயன்றீர்கள். அப்பொழுது அனுபவித்த இன்பம் இப்பொழுது துன்பமாய் முடிந்தது.

தே:— பரம! எங்களுக்குப் புத்தி வந்தது. புத்தி வந்தது! இனி நாங்கள் பொறுக்கமாட்டோம். பரம கருணை நிதியாகிய தாங்கள் எங்கள்பால் அருள்கூர்ந்து எங்களைக் காத்தருளாவிட்டால் இனி வெகு சீக்கிரத்தில் தேவர் குலமே நசித்துப் போய்விடும். ஜகத்ப்ரபோ! அனாதரக்ஷகா! ஆபத்பாந்தவா! ஸச்சிதாநந்த மூர்த்தே! தாங்கள் அறியாததில்லை. தங்களைவிட எங்களுக்குத் துணை வேறுயாரும் இல்லை. சோதனை போதும், போதும்.

சி:— தேவர்களே! சூரன் சாகாவரம் பெறவில்லை. ஒருவராலேயும் வரமளித்த என்னாலேயும் கூட கொல்லப்படக் கூடாது என்று வரம் பெற்றிருக்கின்றானே யொழிய சாகாவரம் பெறவில்லை.

தே:— பின் அவன் எப்படி மடியக்கூடும்?

சி:— என் சக்தி உருவொன்றால் அவன் மாய வேண்டு மென்பதே என் கட்டளை. அவனும் அதற்கிணங்கியுள ான்.

தே:— தேவதேவ! ப்ரபோ! அந்த சக்தி உரு, பொன் உரு, எங்களை வாழ்விக்க வரும் உரு, தேவர் சிறைமீட்க முளைக்கும் உரு, மங்கள உரு, அவுணர் குலாந்தக உரு, எங்கே எப்பொழுது தோன்றப் போகிறார் நாங்கள் கண்ணாரக் கண்டு

அனுபவித்து, ஆனந்தங்கொண்டு, ஆபதம் தீரப் பெற்று இன்ப வாழ்வுறுவது எப்போ ?

சி :— கவலை விடுங்கள். இப்பொழுதே .... என்ன பார்வதி ! தாக்ஷாயணியாய் நீ விளங்கிய காலத்தில் ....

பார்வதி :— நாதா ! நாதா !! போதும் ! போதும் !! அதை ஞாபகப் படுத்தாதீர்கள் ! நடுக்கமுண்டாகிறது. இந்த தேவர்களும் நானும் அனுபவித்த கஷ்டம் போதாதா ? இன்னும், கருணைவள்ளலாகிய தாங்கள் ஏன் இவ்வாறு தண்டிக்கிறீர்கள் என்னை ?

சி :— இல்லை. பார்வதி ! அஞ்சாதே ! தேவர்கள் துயர் தீர்ப்பதற்குச் சமயம் வாய்த்து விட்டதைப்பற்றி உனக்குச் சந்தோஷமில்லையா ?

பா :— சந்தேகமென்ன ? பரம சந்தோஷம். உலகத்தின் மாபெருந் தேவி, தாய், என்று பெயர் சூட்டப்பட்ட எனக்கு, யாவர் துயரும் நீங்கப் பெறுகிறது என்று கேட்டால் ஸந்தோஷம் உண்டாவதற்கு என்ன சந்தேகம். மிகுந்த சந்தோஷம். நாதா ? உடன் கிருபை செய்ய வேண்டும்.

சி :— (பார்வதியை நோக்கிக் குளிர்ந்த பார்வை) என் அன்பே ! தேவர் அறியாமையாற் செய்த குற்றத்தை அறவே மறந்தோம். இனி அவருக்கு அருள்வோம். அவர் ஆபத்தைத் தீர்ப்போம். இதோ .... (ஆறு பொறி முககண்ணிலிருநது பறக்கிறது.)

(தேவர்கள் பொறியின் வெம்மைக் காற்றுது அஞ்சி ஓடுகின்றனர்).

பார்வதி ! இப்பொறிகளைக் கண்குளிரப்பார்

வருணா! வாயு!! இப்பொறிகளைக் கங்கை யாற்றில் கொண்டு விடுவீர்களாக! அவை ஓடி ஒதுங்கி, ஓர் பொய்கையில் நிலைத்து நின்று ஆறு முகத்தோடு கூடிய ஒப்பற்ற ஜோதிர் வடிவாகும். அப்பொய்கை சரவணப் பொய்கை என்று விளங்குவதாக! ஆறு முகங்களோடு தோன்றும் சக்தி வடிவே நீங்கள் உள்பட தேவர்கள் யாவரும் கோரிய என் சக்தி வடிவம். துணையாக இலக்ஷக் கணக்கான வீரரையும் படைப்போம். தேவர்களே! அச்சம் தவிர்க! இனி உங்கள் துயரம் ஒழிந்தது.

தேவர்கள் :— ப்ரபோ! தேவ தேவ! அகிலாண்ட நாயகா! சரணம், சரணம். அனந்த கோடி சரணம். வருகின்றோம்.

## காக்ஷி 19.

இடம் :— (சரவணப் பொய்கை) கங்காநதிக் கரையில் ஓர் பாகம்.

காலம் :— காலை.

பாத்திரங்கள் :— கார்த்திகை தேவிகள், பார்வதி தேவி.

கார்த்திகை தேவிகள் :— (ஆறு பாலர்களாய்த் தோன்றிய ஆறுமுகப் பெம்மானைத் தாலாட்டிச் சீராட்டிக் கொண்டிருக்கின்றனர்)

எம் குலத்தை விளக்கவந்த குலக்கொழுந்தே செம் பொன்னே! மாணிக்கச் சுடரே! பரஞ் சோதி! பரமனுக்குகந்த பரந்தாமா! இனிய கரும்பே! கற்கண்டுக் கட்டியே! தித்திக்கும் தேனே! அமுதமே! உன்னை என்னென்று

பாடுவோம் ஆடுவோம்! எங்கள் உள்ளங் கவர்ந்த தேவ! எங்கள் து ர் தீர்க்க வகத நாதா! சிங்காரா! ஒய்யாரா! .. பாலா ....(பார்வதி தேவி வருகிருள்.) அதோ ... தேவி, தேவி! ஜகன் மாதா! பார்வதி தன் பாலரைத் தேடிக் கொண்டு தான் வருகிருள். சந்தேகமில்லை சந்தேகமில்லை.

பார்வதி:— இது தான் சரவணப் பொய்கை என்று நினைக்கிறேன். இங்கே தான் நாதன்....

கா தே: தேவி நமஸ்காரம் ஆமாம் ஆமாம். இது தான் பெம்மான் அவதரித்த பொய்கை இதோ பொன்னுருவாய் வந்த தங்கள் மதலைகள். எங்களைக் காக்க வந்த கோமகர்கள் பொறியுருவாய் வந்த ஜோதிர் மதிகள். ஐம்பொறிகளையும் அடக்கி, ஐம்புலன்களையும் ஒடுக்கி, சிந்தனை என்னும் ஆருவது பொறியைச்செலுத்தி அன்று, அவிந்து, அடங்கிய தன்மையுடையவர்களாய் ஏத்தி ஏத்திக் கைத் தொழும் முழு முதல். காமக்ரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் ஆறு பகைகளையும் அழிப்பதற்கு ஆறுமுகமாய் அவதரித்துள்ள மூர்த்தி பரமேஸ்வரன் முதலான ஷட்தெய்வங்களின் பூர்ண சக்தியோடு அவதரித்துள்ள ஷாட்குண்ய பூர்ணமான வஸ்து. மஹேசன் தந்த மஹத் புருஷன் மஹபதியின் குலைந்த பெருமையைக் கூட்டிவைக்க வந்த அருங்குல திலகன். அம்மணி! கண்ணெடுத்துப் பாருங்கள். கண்ணைக் கவரும் செல்வத்தை வாருங்கள். வாருங்கள்

பா:— தேவதைகளே! மனதிற்குகந்த மாற்றத்தையே செப்பினீர்கள் அனைத்தும் உண்மையே எங்கள் குலக் கொழுந்து உங்கள் குலோத்தாரண கர்த்தனுய், அவதரித்த பால முகங்களெங்கே:

கண்களே! எம்பெருமான் கருணாநிதியின் நேத்திரத்திலிருந்து ஜனித்து நேத்ரானந்தத்தைத் தரும் ஜோதிர் மணிகளே விண்ணவர் துயர் நீக்க வந்த தண்ணருள் வடிவங்களே!

(ஆறு வடிவங்களாகத் திகழ்ந்த பாலர்களைத் இரு கைகளாலும் அன்புடன் அணைக்க.)

நீங்கள் ஒருருவாய், ஒப்பற்ற உருவாய், திருவுருவாய், சூரனை மாய்க்கவந்த வீர உருவாய், முருகனாய், ஆறு முகமும் ஓர் யாக்கையுமாய்த் திகழ்வீர்களாக!

பன்னிரு தோளும், பன்னிரு கண்ணும், முக்கண்ணனார் அருளிய வேலும் பல்லோர்க்கும் எல்லோர்க்கும், நல்லார்க்கும் அல்லார்க்கும். பயனளித்து அல்லல் நீக்குவதாக! அருமதலாய்! அண்ணல் கனிந்து தந்த அழகா! வேற்கையா! அவுணர் அகந்தையை அறுக்க வந்த அரியாய்! நீ வாழ்க! உன் கருமம் வாழ்க! உன்னை அண்டினோர் வாழ்க! உன்னைக் கண்டோர், நினைந்தோர், 'ஆறுமுகம் ஆறுமுகம், ஆறுமுகம்' என்று உன் நாமம், ஜெபித்தோர் யாவரும் வாழ்க!

(ஆறு வடிவமும், ஓர் வடிவமாகி, ஆறுமுகமும்! பன்னிரு கண்ணும் கையும், வேற் கரமுமாகத் திகழ்கின்றது).

———

## காட்சி. 20.

### ஆறுமுகக் கடவுள் காக்ஷி

இந்திரன்:— தேவ தேவ! புருஷோத்தம! ஜகன்னாத- எங்களை உய்விக்கவந்த மூர்த்தி! நீயே சரணம்! நீயே சரணம்! எங்கள் துன்பம் ஒழிந்தது. இன்பம் சுரந்தது. நாங்கள் பிழைத்தோம். எங்கள் குலக் கொழுந்தே சரணம்! சரணம், வேலா, சரணம்!

[மங்களம்.]

யாவரும்:—

"ஏறு மயில் ஏறி விளையாடு முகம் ஒன்றே!
ஈசருடன் ஞானமொழி பேசு முகம் ஒன்றே!
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே!
குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம் ஒன்றே!
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே!
வள்ளியை மணம்புணர வந்த முகம் ஒன்றே!
ஆறுமுகம் ஆனபொருள் நீ அருள வேண்டும்!
ஆதி அருணசலம் அமர்ந்த பெருமாளே!"

———

ஓம்: ஸ்ரீ முருகா

தலைவன் தலைவி — சம்பாஷணை

# ஐயப்பன் மஹிமை

1. அப்பன் அவன் அம்மையவன்
உற்றதொரு மாமன் அவன் —கண்ணே
பொன்னும் அவன் புகழும் அவன்
தவமும் அவன் நெறியும் அவன் — மானே.

2 நாண் மலர்த் தேன் நுகரவே சூழ்
வண்டினம் போல் பக்தர் கூடி —நாதா
நல்லதொரு நேர்ச்சை செய்யும்
நாளெதுவோ சொல்லுங்களேன் — தேவா

3. தைப் பொங்கல் தானுமது
பொங்கிடும் நாள் நல்லநாளே — கண்ணே
மகரமங்கா விளக்கேற்றும்
மகிழ்ச்சியுறு நாளுமது —மானே.

4. புனிதமான அந்நாளில்
பதினெண்படி மேல் முடியான் — நாதா
பாதம் பற்றி போற்றிடினே
பாப மெல்லாம் சிதையுமன்றோ — தேவா

5. மீன முடி மாதத்திலே
மஹிமை உறு உத்திரமாம் — கண்ணே
மறவாமல் கருத்தில் வைப்பாய்
மண்டலேசன் ஐயப்பன் நாள் —மானே.

6. அண்ணல் அவன் அரன்மகனும்
அரியின் பாலன் அருள் வடிவோன் - நாதா.

அன்புடனே அடிபணிவார்
ஆபதங்கள் அகற்று வானே — தேவா.
7. ஐயமது இல்லையடி
அச்சமதும் தொலையுமடி — கண்ணே
அவனி யெலாம் காவல் செய்து
அகலாமல் அருகிருப்பான் — மானே.
8. முடி ஒளிரும் மன்னர்களும்
மன்னு புகழ் வீரர்களும் — நாதா
மாண்புறவே மணிகண்டன்
மன்னு பதந்தனக்கடிமை — தேவா
9. மன்னர்களும் வீரர்களும்
கலங்கடித்த காலனன்றோ — கண்ணே
புலிமந்தை தனைக் கொணர்ந்து
பதறடித்த பாலனன்றோ மானே.
10. அண்டினோர்கள் அவதிநிலை
அக்கணமே அகற்றிடுவான் — நாதா
ஆசிரியர் சொல் கடவா
அழகனவன் அப்பயனன்றோ — தேவா
11 உண்மை பொறை வடிவழகி
உத்தமியே உறுதி சொன்னேன் — கண்ணே
ஊறுதவிர் பந்தளத்தான்
உற்ற துணை என்று நம்பாய் —மானே.
12 சபரிமலை ஆண்டவனை
சாடும் புலி வாகனனை — நாதா
சரதமென்று பணிந் திடவே
சந்தோஷமாய்ச் சென்று வாரும் —தேவா.

———

ஓம் : ஸ்ரீ முருகா



சென்னை - கோடம்பாக்கம்

# வடபழனி ஆண்டவன்

# திருப்பதிகம்

(அந்தாதி)



1. அருணையை அணைந்த பெம்மான்,
கருணையே உருவாக் கொண்டோன்,
வருடு நற்பாதத்தானை
வணங்கியே ஏத்தி நிற்க,
தருணமும் அஃதாக் கொண்டு
தகை முதிர் அன்பினாலே
அருமொழி பகருவண்ணம்
அருட் செய்தான் ஆண்டன்தான்

2. ஆண்டவ னிணையடிக்கே
ஆட்செய விரைந்து செல்வோம்,
பூண்டநல் திருவின் மார்பன்
புங்கவன் மருகன் நாமம்

பூண்ட பேரணியாய் நல்ல
புத்துயிர் உரமுமாகி
ஈண்டிடை விடாமல் செப்பி,
ஏத்தி, மேல் நிலையுங் கொள்வோம்.

3 கொள் தவப் பேற்றுனல்லால்
கொள்ளுவதி யாது மில்லை,
கொள்புலன் பொறிகளே நம்
கொல் யமனென்று கொள்வீர்!
கொள்ளு ணும் இவுளிபோலே
பிணிபவச்சகட மீர்த்துக்
கள்ளுணு குரங்காயாடி
விள்ளுறு மனத்தையாள்வீர்.

4. ஆள்வது உம் மனத்தை,
அகழ்வது பகை சினத்தை,
மீள்வது வினையினின்றும்,
மிகுவது நல்லறங்காண்,
போள்பது அழுக்கவா தான்,
பொற்பதத்துரிமை வேண்டின்
நாள் வரும் உடல் விட்டேகல்
நினைவுளீர் நண்ணுவீரே.

5. நண்ணுக வினைகளோர்ந்து,
ஏற்றுக மயிலும் வேலும்,
கண்ணிகர் அவன் கழற்கே
கண்ணொடு மனமுமீக,

வண்ணனுப் அவன் ஈராறு
கண்ணருள் விரைந்து நும்மேல்
எண்ணுமோர் திவலை வீழில்
எழுமையும் இன்பந்துய்ப்பீர்.

6. துய்ப்பதும் குமரன் நாமம்,
துங்க வேற்கையன் கந்தன்
மெய்ப்பதம் காப்பதாகும்,
மெய்ம்மையே சொன்னேன் கேளீர்!
கைப்பதாம் அமுதும் செவ்வேள்
கடம்பன் பேர் சுவைக்கும் வாய்க்கு,
வைப்பசீர் சென்னை மேவும்
பழனி வேலிணையடிக்கே.

7. அடிகளார் முதல்வன், ஆர்க்கும்
அறைமறை போற்றும் வள்ளல்,
செடிதினைப் புனக்குறத்தி
செம்மாவுந் தேனுமுண்டு
கொடியனுள் மலர்க்கரங்கள்
பிடித்தாண்ட சீலன். லோலன்,
மிடிதவிர் கோடம்பாக்க
பழனி ஆண்டவன் தாள்போற்றி.

8. போற்றிய தேவர் துன்பம்
போக்கிய செல்வன், காந்தன்,
ஏற்றுவார் இன்னலெல்லாம்
தூற்றியே மாய்க்க வல்லோன்

ஊற்றெனச் சுரக்கும் அன்பின்
ஊக்கியே வாழ்த்தும் வீரன்,
காற்றினும் கடிய வேலின்
காப்பவன் தாள்கள் காப்பே !

9. காப்பொடு சிறை செய்தாங்கு
கைது செய்திட்ட சூரன்
மூப்பொடு மறமுமாய்த்து
மீதமர் கொடியுமாக்கி,
கூப்பிடு மடியார் தங்கள்
குறைதவிர் கயிலை மைந்தன்,
வாய்ப்படு புகழின் மாரி
வளவட பழனி யாண்டோன்.

10. ஆண்டவகை யவனேயாகி,
அறுபடை யில்லோனாகி,
சேண்டலத் திழிந்த கங்கை
செஞ்சடை வைத்தோன் எந்தை
மூண்ட வெய்வெகுளிக் காற்று
மென்றமிழ்க் கீரர்க்கானன்,
தாண்ட இம்மாய வாழ்வு
துணைவட பழனி வாய்த்தான்.

11. வாய்ந்த பேர் செலவன் காணீர் !
கலியுக வரதன் காணீர் !
தாய் தமர் அவனே எண்ணீர் !
தன்னிகர் தானே யென்ன

ரங்கதிர் வீரவேற்கை
அச்சமும் அபயங்காட்ட,
தூயவர் நெஞ்சம் வைகும்
தூய் வடபழனி வாழ்வான்.

2. வாழ்வள மூதூர் நாப்பண்
வண்மை சால் கந்தகோட்டச்
சூழ் நலம் நல்கும் செவ்வேள்
சேவடி யகத்திற் பூண்டே,
காழ்பெறு பொழில் சூழ்செய்ய
கனவட பழனித் தேவன்
தாழ்தவழ் கடம்ப மார்பம்
திகழ்முகங் காண்போம் வாரீர்.

மங்களம்

வாழ்க பொற்பதம் காத்த நல் வானவர்,
வாழ்க சொற்பதத்தால் புகழ் செம்மையர்,
வாழ்க நற்பதத்தால்வினைசெய்பவர்,
வாழ்க எப்பதத்தாலுமுய் உயிரெலாம்,

சுபம்

வட பழனி ஆண்டவன் பொற்பாதமே துணை.

முருகா—முருகா—முருகா.

உ

ஓம் ஸ்ரீ முருகா

கொல்லம் 1127 ம் ஆண்டு சித்திரைத்திங்கள் 31 ம் தேதி (13-5-1952) செவ்வாய்க்கிழமை காலை, பழநி ஆண்டவன் திருச்சன்னிதியில் "அன்புவெளியீடு"

ஆசிரியன்

திரு. நா. பிச்சுமணி,

ஆண்டவன் அருட்கழலில் பணிவுடன் பணித்த

# வேண்டுகோள்.

மாந்தருள்ளத்து ஊன்றி. மங்குலாம் மாயை தன்னை
மாயவே அருளும் அன்பன். மருளறு முருகன் பாதம்
மாண்புற சரண்புகுந்தே "ன்னும் பேறடைவ தல்லால்
மாபொருள் பிறிதுமுண்டோ! மான்யரே! புகல்வீர்!
மன்னே!

தான்தனிப் பொருளுமாகி தன்னிக ரில்லையாகி,
தாரணி உய்யத்தோன்றி, திகழருள் பரப்பும் வள்ளல்,
(நமைத்) தாங்கிட உள்ளக்காலை, தயங்குவதேனே
சொல்வீர்!
தாமதமின்றி வீரம் திகழ்கழல் நண்ணுவீரே!

வரந்தரும் முருக நாமம், மருந்தரும் முருக நாமம்,
கரதலா மலகம்போல உறுவினை தகர்க்கும் நாமம்,
விரதமாக் கொண்டு அண்ணல் முருகனின் நாம
மெண்ணி!
அரன்மகன். அழகன், கந்தன். அருங்கழல் பேணுவீரே

ஒருபழம் உறுதல் வேண்டி ஈரேழு புவனம் சுற்றித்
தருபுனல் ஏந்தும் தேவன் தேவியோ டமைதியோத
செறிவள முறுதண் சோலை சூழ்தரு கிரிவாழ்வேலன்
தருமருள் பெற்றே உய்ய விரைந்து சீர் வாரீர்! வாரீர்!

கண்ணனார்மருகனென்பார் தண்ணருள் வரதனென்பர்,
திண்ணனார்கண்கள்பெற்ற வண்ணனார் பாலனென்பர்,
எண்ணினார் நெஞ்சினுள்ளே எள்ளினுள் எண்ணெய்
போன்று
நண்ணினார் பழனிவேலர்க் கடிமைசெய் வாழ்வு
கொள்வீர்!

சரவணபவனே யாகி, வரகுண னவனே யாகி
அருந்தவ வேடமங்கைக் கடைக்கல மளித்தோனாகி,
மறத்தினலாண்ட சூர னிருதரை மாய்த்தோனாகி,
வரத்தினல் உரியதெய்வ யானையைக் கொண்ட தேவன்.

வாழ்த்து

பண்டாரப் பையன் வாழி!
பண்தரு தமிழ்த்தே வாழி!
கண்டாரை உள்ளம் வெளவும்
கண்ணருள் சுரப்போன் வாழி!
வண்தாரக் கடம்பன் வாழி!
வணங்குநல் கழலோன் வாழி!
செண்டார்கொள் அம்மை பாலன்
பழனிவேல் வாழி! வாழி!!

— : —

Jyothi Printers, Madras-1.

தி. க. சண்முகசுந்தரம்

ஆசிரியர் திரு. நா. பிச்சுமணி இயற்றிவரும் 'அன்பு வெளியீடு' நூல்களின் விபரம்:—

| | | |
|---|---|---|
| அன்பு வெளியீடு | அலர் 1. | சேந்தூரகவல் வேங்கடேச அகவல் பராசக்தி 'முப்பத்து' |
| ,, | அலர் 2. | 'குமரப்பத்து' ஷை இரண்டாம் பதிப்பு (சில கீர்த்தனங்கள் உள்பட). |
| ,, | அலர் 3. | 'முருகன் அக்ஷரமாலை' |
| ,, | அலர் 4. | 'சரணபத்ததி' |
| ,, | அலர் 5. | 'பராசக்தி கீதம்' |
| ,, | அலர் 6. | 'திருப்புடைமருதூர் தலச்சிறப்பு' |
| ,, | அலர் 7. | 'ஐயப்பன் போற்றிசை" |
| ,, | அலர் 8. | 'முருகன் திருவிருத்தம். |
| ,, | அலர் 9. | 'குமரோதயம்' (நாடகம்) |
| ,, | அலர் 10. | 'குருவாயூரப்பன் திருச்சதகம்' (வெளிவரும்) |
| அன்பு வெளியீடு விசேஷ | அலர் 1. | 'ஐயப்பன் ஆனந்தக்களிப்பு' |
| ,, | அலர் 2. | 'தேவி ஆனந்தக்களிப்பு' |